தமிழ் வித்துவான் சங்க வெளியீடு

# அன்பு முடி

## (சேக்கிழார்பெற்ற எறிபத்தர்)

---

ஓர் இலக்கிய ஆராய்ச்சியுரை.

இது

வித்துவான்

தெ. பொ. மீனாக்ஷிசுந்தரனார் M.A., B.L., M.O.L.,

(தமிழ்ப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)

இயற்றியது.

*The Alliance Company,*

*Mylapore : : Madras*

 1945. [விலை ரூ. 1—12—0.

# பாவலர் நினைவு மலர்.

---

அன்பும் அறிவும் குழைத் தெனக்கு ஊட்டி வளர்த்த
எனது திருத் தமையனார்
**சதாவதானம் - தெ. கிருஷ்ணசாமிப் பாவலர்**
அவர்கள் திருவடிக் கணிந்த
அன்பொழுகு நினைவு மலராக
இந்நூல் இலங்குக.

பொன்னை நிலந்தன்னைப் புதல்வர்களை மங்கையரைப்
பின்னையுள பொருளை யெல்லாம் பெறலாகும்
என்னையுடைய **தமையோனே** இப்பிறப்பில்
உன்னையினிப் பெறுவதுண்டோ உரையாயே

— கந்த புராணம்.

**ஆக்கியோன்.**

# முன்னுரை

இந்நூலை என்னுடைய பழம் பிறப்பில் யான் எழுதிய தாக என்னுடைய நண்பர் ஒருவரிடம் கூறினேன். "நாளு நாள் சாகின்றேமால் நமக்கு நாம் அழாததென்னே" என்று வளையாபதி கேட்குந்தோறும், "நாளுநாள்பிறக்கின்றேமால் நமக்கு நாம் அழுவதென்னே" என்று எனக்குள்ளேயே பாடிக்கொள்வது என் வழக்கம். ஆதலின் பழம்பிறப்பென னத் தட்டில்லையே? சில ஆண்டுகளுக்கு முன்னர், விவேக போதினியின் ஆசிரியர், திரு. குப்புசாமி ஐயர் அவர்கள், என் னிடத்திலிருந்து ஒரு கட்டுரை பெறப் பெரிதும் முயன் ருர். எழு செருப்புக்கள் தேய்ந்தனவோ? யானறியேன். 'மலையைக் கல்லி எலியைப் பிடித்தார்' என்பது பழமொழி. "மலை, இடுப்பு நோவு பட்டது; எலியைப் பெற்றது" என் பர் கார்லைல். யான் பெற்ற எலி இக்கட்டுரைதான். பிள்ளைப் பேறு பார்த்த மருத்துவச்சியார், எனது நண்பர் விவேக போதினியின் ஆசிரியர். இதனை அந்நாளில் கண்டோர், இப் போது யான் புன்னகை புரிவதுபோல், புன்சிரிப்புச் சிரித்தன ரோ, அல்லது பேய்ப் பிள்ளை என அஞ்சினரோ யான், அறி யேன். ஈது ஆணோ பெண்ணோ என்பது இன்னமும் எனக்கு விளங்கவில்லை. இக்காலப் போக்கில் முன்னணியில் நிற்கும் குழவி அப்படித்தான் இருத்தல் வேண்டுமோ!

ஈதொன்றுதான், என் பழம் பிறப்பென எண்ணிவிட வேண்டா. எத்தனையோ பழம் பிறப்புக்கள் உள. இது பற்றியன்றே உயிரினமியாமையை எண்ணுந்தோறும், உள் ளங்குழம்புகின்ருர் ஸ்வின்பர்ன் என்ற பாவாணர். சேக்கிழார் பாடலை, கல்லெடுப்பு நாளன்று, இரவில் பேயோட்டும் பாட்டா கப் பாடக்கேட்டது என்னுடைய பழம்பிறப்புக்களில்தான். ஆனல், எனக்கோ அது தாலாட்டுப்பாட்டாய்த் தூக்கமே

விளைத்தது. மற்றொரு பிறப்பில் வேறொரு கல்லெடுப்பு வீட்டில், கண்ணப்பர் வரலாற்றைக்கேட்டு, என்னையு மறியாது கண்ணீரும் கம்பலையுமாக்க் கலங்கி நின்றேன். இந்த அன்பெனும் குழவியை விரிவுரையாளர் அப்பொழுதே கழுத்தைப் பிடித்து நெருக்கிவிட்டார்! நானும் அயர்ந்து தூங்கி விட்டேன். திருநீற்றுப்பையும், சிவப்பட்டும், திருமலரும், சேக்கிழாரை, நான் பாராதபடி முழுதும் மறைத்து விட்டன. இலக்கியச்சுவை ஒன்றே நாடும் எனக்குத் தூக்கமே விஞ்சியது.

எனது நண்பர் திரு. ஆ. ச. அண்ணாமலை முதலியார் B.A. (Assessor, Corporation of Madras), என் மற்றொரு பிறப்பில், சேக்கிழாரைப்பற்றிக் கடவுட் பாவாணர் எனப் புகழ்ந்து பேசினர்; புன்னகை புரிவதே எனது வழக்கம். சேக்கிழாரது பெரிய புராணத்தைத் தம்மோடு உடனிருந்து ஓதவேண்டும் என்று வற்புறுத்தினர் அப்பெரியார். பல பிறவியிலும் இத்தகைய ஆசூழ் என்னை விட்டுப் பிரிந்ததில்லை. கரும்பு தின்னக் கூலியும் கிடைக்கும். திருநூல்களை யான் ஓத, நண்பர் பலர் வற்புறுத்துவது என் வாழ்க்கையில் வழக்கமாய் விட்டது. அவருடன் ஓதினேன்; புதியதொரு பிறப்புப் பிறந்தேன். புதியதோர் உலகிற் புகுந்தேன். சேக்கிழார் வெறி என் தலைக்கும் ஏறிவிட்டது. அப்போது, என் அறிவிற் பிறந்த குழவிகளைச் செவிலித்தாயாய் அன்புடன் பாராட்டி வந்தனர் எனது நண்பர். இத்தகைய குழவிகளில் ஒன்றின் இரண்டாவது பிறவியே இந்தக் கட்டுரை; இப்போது மூன்றும் பிறவி எடுத்து உலகிடை நிலவத் தளர்நடையிட்டு உம்மை நோக்கி வருகிறது.

பழம் பிறப்பைப்பற்றி எழுதும்போது, காய்தலோ உவத்தலோ இருப்பதற்கில்லை. நடுநிலை நின்றே இக்கட்டுரையை ஆராய்கின்றேன். இந்நாளுக்கும் ஈது ஏற்றதென்றே

தோன்றுகிறது. எனது நண்பர் திரு-துரையரங்கம் பிள்ளை (Teacher, Hindu Theological High School) யவர்கள் இக் குழவியின் மூன்றும் பிறப்பின்போது, செவிலித்தாயாய் நின்று, பிழையறத்திருத்திப் பாராட்டி வளர்த்து உலகில் தவழவிடுகிறார். ஓரே நாளில், இக்கட்டுரை உலகிடைச் சிறிதே ருருட்டியருள அச்சேற்றி இக்குழவிக்குக் கற்பித்தார் எனது நண்பர் திரு. சி. பாலசுந்தரமுதலியார் அவர்கள். இக் குழவியினிடத்து இந்த நால்வருக்கும் இருக்கும் அன்பு எனக்கு இருந்ததில்லை. எந்நன்றியும் அவர்க்கே உரியதாம்.

இப்போதைய பிறப்பைப்பற்றி ஒன்று கூறி முடித்துக் கொள்கின்றேன். என்னுடைய பிறப்புக்கள் திருமாலின் பிறப் பைப் போலவோ, புத்தரின் பிறப்புக்களைப் போலவோ சுவை யுள்ளன அல்ல; ஆதலின் பரக்கப்பேச விருப்பமில்லை. சேக் கிழார் வடமொழியிலிருந்தே இந்த நூலை மொழிபெயர்த் தார் எனச் சிலர் மூலை முடுக்கில் முழங்குகின்றார்களாம். இவ்வாறு வாடைக்காற்று வீசுகின்ற தென்பர் எனது நண் பர் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் அவர்கள். உபமன் னிய பக்த விலாசமும், சிவபக்தவிலாசமும், என் கையைச் சிறிது கடித்தாலும், அவற்றை வெள்ளித் தொடரிட்டுக் கொண்டுவந்து ஓதினேன். சிவபக்தவிலாசம், உபமன்னியர் கூறிய வாலாறுகளைக் கேட்ட அகத்தியர், முனிவர்களுக் குக் காஞ்சியில் கூறியருளியது. இதனை இயற்றியவர் ஹர தத்த முனிவர். இவர் சேக்கிழார்க்கும் பின் வாழ்ந்தவரே யாம். நல்ல இதிஹாச நடையில் செவிக்கினிக்கப் பாடியிருக் கின்றார் இப்பெரியார். மதம்பிடித்த யானையைக் கரேணு எனப்பெண்பாலால் கூறுவதுதான் என்னைத்திடுக்கிடச் செய் தது. மற்றைப்படி இந்நூலின் ஓசையின்பம் என்னுள்ளத் தைக் கவர்ந்தது. எறிபத்தர் என்ற பெயுரைத் தாருகர் (எறி வார்) என மொழிபெயர்த்துக் கொண்டார் ஆசிரியர்; ஆனிலை

என்பதனைக் கோஸ்தலம் என மொழிபெயர்த்துக்கொண்டார். எறிபத்தர், யானையை எறிந்த தறுகண்மையிலும், தன்னுயிரைப் பொருட்படுத்தாது முன் வந்தமையையே பாராட்டுகின்றார். தன்னிழுவே சிறந்ததெனத் தம் வரலாற்றைத் தொடங்குதலும் காண்க. வானிடை எழுந்த திருமொழியும் "மழுவை எறிந்துவிட்டு உள்ளத்தாலே வழிபாடியற்றுக" எனக் கட்டளை யிட்டமையை, முனிவர் வற்புறுத்துவதின் நின்றும், அவருடைய நாட்டம் அன்பு நாட்டமே என்பது விளங்குகிறது. எறிபத்தர் வரலாற்றை வேருெரு வழியில் கூறக்கூடும் என யான் கணக் கண்டதை இக்கட்டுரையில் (பக்கம் 77) காணலாம். அதற்கு ஒத்துள்ளது முனிவரார் கூறும் வரலாறு. யானை, மதவெறிபிடித்து ஊரைக் கலக்குகிறது; எதிரே சிவகாமர் வருகின்றார்; அஞ்சி நடுங்குகின்றார்; யானை, பூங்குடலையை வீசி எறிகிறது; புலம்புகின்றார் சிவகாமர்; புலம்புதல் கேட்டு ஓடிவந்து யானையை வெட்டுகின்றார் எறிவார். இந்த நிலையில் யானையைக் கொல்வது தவருகாமை நோக்குக.

உபமன்னிய பக்தவிலாசமோ, கைலைக் கெழுந்தருளும்போது, சுந்தரர் பேரொளியாகத் தோன்ற, அதனை விளக்கிச் சுந்தரர் வரலாற்றையும், அவர் பாடிய திருத்தொண்டத் தொகையிற் கண்ட அடியார்கள் வரலாற்றையும், முனிவர்களுக்கு, உபமன்னியர் கூறியது. சிவபக்த விலாசத்திற்கு முன்னூல் போலத் தோன்றினும், நடைமுதலியவற்றை நோக்கும்போது, பின்னூல் என்பது வெளியாகிறது. இந்நூல், சேக்கிழார் நூலின் மொழிபெயர்ப்பென்பதிலும் ஐயம் இல்லை. வடமொழிப் பற்றுப் பெரிதும் உடைய எனது நண்பர் வியாகரண சிரோமணி-திரு. கங்காதர நாயர் (Sanskrit Pandit, Chintadripet High School) அவர்களும் இந்நூல்களை என்னுடன் ஆராய்ந்து, இம்முடிவிற்கே வந்தார்.

மொழிபெயர்ப்பு நூலாதலினாலன்றோ, இதனிலுள்ளபாடல்கள் ஆற்றொழுக்காக ஓடாது, தடைபடுகின்றன. "நெடியோன் அறியா நெறியார் அறியும் - படியால் அடிமைப்பணி செய்து தொழுகும் - அடியார்களில் யான் ஆரா அணைவார் முடியா முதல்வர்" என்பதனையும், "கண்டவர் இதுமுன்பண்ணல் உரித்த அக்களிறே போலும்" என்பதனையும் மொழிபெயர்த்துள்ளமை காண்க. சேக்கிழாருடைய சிவகாமியார் "பிழைத்துப்போகா நின்றதித் தெருவே" என்றார்; பிழைத்தல் என்ற சொல்லையே பயன்படுத்தி, "இந்த பிழைப்பதெங்கே" என்கிறார் எறிபத்தர். இதனை மொழிபெயர்ப்பார், சிவகாமியார் கூறிய பிழைத்தலை மொழிபெயர்க்காது எறிபத்தர் கூறிய பிழைப்பை மட்டும், மொழிபெயர்க்கும் போது, சுவையொன்றுமின்றி, வெற்றெனத் தொடுத்தலாக முடிவது காண்க. பல பாடல்களுக்குப் பெரிய புராணத்தின் உதவிகொண்டு பொருள் அறிந்தோம். "பொன்மலைப் புலிவென்றோங்க" என்ற பெரிய புராணப் பாட்டில், காவேரிக்கு வழிதிருத்தியமைத்ததையே சேக்கிழார் கூறியுள்ளார் என, யான் பொருள் எழுதியுள்ளேன். இவ்வாறே உபமன்னிய விலாசமும் பொருள் கொண்டிருத்தல் காண்க. திருவானிலை என்பதனை திருவரானிலை என்றும், ஓலையில் ஓதக் கூடுமாதலின், அவ்வாறே பிறழ்பட எழுதி ஹாதாமம் என மொழிபெயர்க்கின்றது இந்நூல். எறிபத்தர் வீரபத்திராகின்றார்; கருவூர் கர்ப்பபுரியாகின்றது. மொழி பெயர்ப்பார் சேக்கிழார் உள்ளக் கருத்தினை உள்ளவாறு விளக்கவில்லை. அரசர் வாளை நீட்டியபோது, 'தன்னைத்தான் துறக்கும்' என்று வாங்கினார் என்பர் சேக்கிழார். தம்மைத் தாமே கொல்லவேண்டி வாங்கினார் எறிபத்தர் என்பர், மொழி பெயர்ப்பாசிரியர். யானை மீதேறிச் செல்லவேண்டும் என அரசரை வேண்டுவார் சேக்கிழார் நூலில், எறிபத்தரேயாம்.

ஈதோர் அன்பு நுட்பத்தைக் காட்டுகின்றதென விளக்கி னேன். மொழி பெயர்ப்பாசிரியரோ மாவெட்டிகளே அவ் வாறு வேண்டுவதாகக் கூறிப் பின்னே எறிபத்தரும் அவ் வாறு வேண்டினர் என்பர். இவை கிடக்க.

இவ்விரு நூல்களும் பெரிய புராணத்திற்குப் பின் எழுந்தன எனக்காட்ட ஒரு குறிப்புண்டு. இவ்வரலாற்றில் வரும் சோழனது பெயர் புகழ்ச்சோழனாகும். சேக்கிழார் காலத்தே, இந்த நூலைப் பாடுவித்தவன், அநபாயன் ஆகும். அநபாயனது முன்னோன் எனப் புகழ்ச் சோழரைப் பாடுகின் றனர் சேக்கிழார். இதனுண்மையை ஆராயக்கூடாத பிற்கால இருட்டில் வாழ்ந்த மொழி பெயர்ப்பாசிரியர்கள் இருவரும், புகழ்ச்சோழனையே அநபாயன் என்றும், அநபாயநயன் என் றும், தாம் விரும்பியவாறு எழுதிவிட்டனர். "அநபாயன் சீர் மரபின் மாநகரமாகும்' என்பதற்கு உண்மைப்பொருள் காணுதபடி, வரலாறுகள் மறைந்துபோன காலமே, இந்நூல் கள் இரண்டும், தோன்றிய காலமாகும். இதனை ஆராய் வாருக்குப் பயன்படுமாறு, அவற்றை மொழி பெயர்த்துப் பின்னே சேர்த்துள்ளேன்.

சேக்கிழாருடைய பாடல்களையும் ஆங்காங்கே சேர்த் துள்ளேன். அவற்றின் பொருளறிய விரும்புவார்க்கென உரை எழுத விரும்பினேன். பழைய உரையையே வெளி யிடின், யான் கூறுவது தான் பொருள் என்ற மயக்கம் நீங்குவதோடு, ஓதுவார் பழைய உரையோடு என்னுடைய கொள்கையையும் ஒப்புநோக்க இடமும் உண்டாகும்; பழைய உரைக்கு உயிர்கொடுத்த பெருமையும் எனக்குக் கிடைக்கும் எனக்கருதி, அச்சேறிய உரைகளில் மிகப்பழைய தாம் மழவை.மகாலிங்கையர் உரைமேல்என்எண்ணம் சென் றது. என்னுடைய உரை நூல் காணுது மறையவே, வருந்தி நின்ற நிலையில், திரு. இராஜேசுவரியம்மையார் M.A., L.T.

(Lecturer in Physics, Queen Mary's College) ஒரு விரிவுரையில் மகாலிங்கையருரையைப் பற்றிப் பேசியமை நினைவிற்கு வர, அம்மையாரவர்களைக் கேட்டபோது, தம் உரை நூலை அன்புடன் உதவினர். அவ்வுரையை இந்நூலில் காண்போர், அவ்வம்மையார்க்கே நன்றிசெலுத்தக் கடமைப் பட்டுள்ளார்கள்.

எனது நண்பர் திரு.பண்டிதமணி-கதிரேசம் செட்டியா ரவர்கள் கூறுவதைப் பன்முறையும் கேட்டுப் பாடல்களோடு ஒருங்கியைந்து "சமாதிகூடிக்" கண்ட சுவையுலக உண்மை களை, இலக்கியச்சுவை யொன்றே நாடி, யான் எழுதியமை கண்டு, இதனில், "சித்தாந்த சாத்திரம்" என வழங்கும் மெய்யுலக உண்மைகள் இல்லையே எனக் கையை முறிப் பார்க்கு ஒன்று கூறுவேன். சேக்கிழார் நூலை உங்களுடைய மெய்யுலகில் வாழ்வார் மட்டுமேயன்றி, எங்கு வாழ்வாரும் கண்டு கேட்டு இன்புறப்பாட்டுலகில் வழிகாட்ட முற்பட் டது, கெட்ட எண்ணத்தாலன்றே? வழிகாட்டுவதுபோலப் படுகுழியில் தள்ளுகின்றேன், என்பீரேல் யான் அதற்கு மிக வும் வருந்துகின்றேன். எனினும், யான் வேறு வழியில் நடப் பதற்கில்லையே. அல்லாக்கால் யான் பொய்யனுவேன்.

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்

தமிழகம்
சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை. 24-5-34.

இங்ஙனம்,

தே. மீனுக்ஷிசுந்தரன்.

# அன்பு முடி

## அல்லது

# எறிபத்தர்

---

### க. அன்போ கொலையோ?

**வ**ரலாற்றின் வரலாறு:—எறிபத்தர் என்பவர் ஒரு சிவனடியார். இவரது இயற்பெயரை யாம் அறியோம். இவர் அன்பர்க்கு இடையூறு நேர்ந்தவழி அவ்விடையூறு செய்தாரை மழுவால் எறிந்து இடுக்கண் களைந்து அன்பு பாராட்டி ஒழுகினர்; ஆதலின் எல்லோராலும் **எறிபத்தர்** எனப் புகழப்பட்டார். புகழுடம்பிற்குரிய அச்சிறப்புப் பெயரே இவருடைய திருப்பெயராக நிலவி வருகின்றது. இவருடைய வரலாற்றையே புனைந்துரை வகையால் சேக்கிழார் பாடுகின்றார்.

> " இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தற் கடியேன் "

என ஆளுடைய நம்பிகள் பாடிய அடியே, சேக்கிழார்க்கு முதல் நூலாகும். மழுவின் நுனியை இலைவடிவாம் வேல் போலக் கூராக வைத்திருந்தமை பற்றி நம்பிகள் இவரை இவ்வாறு புகழ்ந்தனர் போலும். நம்பியாண்டார் நம்பி,

> " ஊர்மதில் மூன்றட்ட உத்தமர்க் கென்றோர் உயர்தவத்தோர்
> தார்மலர் கொய்ய வருவான் தண்டின் மலர்பறித்த

ஊர்மலே மேற்கொளும் பாக ருடறுணி யாக்குவித்தான்
ஏர்மலி மாமதில் சூழ்கரு வூரி லெறிபத்தரே."

என்று திருத்தொண்டர் திருவந்தாதியில் பாடியதே ஆரூருடைய நம்பிகளது முதனூலுக்கேற்ற வழி நூலாகும். இதற்குச் சார்பு நூலாகச் சேக்கிழார் பாடியுள்ள புனேந்துரை வரலாற்றை உமாபதி சிவனுர் கீழ்வருமாறு சுருக்கிக் கூறுகின்றார்:—

" திருமருவு கருவூர்ஆ னிலேயார் சாத்தும்
சிவகாமி யார்மலரைச் சிந்த யானே
அரனெறியோ ரெறிபத்தர் பாகரோடும்
அறஎறிய 'என்னுயிரும் அகற்றீர்' என்று
புரவலனுர் கொடுத்தபடை யன்பால் வாங்கிப்
புரிந்தரிவான் புக, எழுந்த புனித வாக்கால்
கரியினுடன் விழுந்தாரும் எழுந்தார் தாமும்
கணநாத ரதுகாவல் கைக்கொண் டாரே."

அன்பென்றல் ஆனேக்கோலேயோ?:— ஒரு பூக்குடலேயை வலித்திழுத்த யானேயோடு அதனேச் செலுத்தி வந்த ஐந்துமா வெட்டிகளேயும் கொல்வதோ சிவத்தொண்டு? இக்கொலேயைப் போற்றவோ இப்புனேந்துரை எழுந்தது? 'அன்பே சிவம்' என்ற பெரும்பேச்செல்லாம், ஆனேயையும் ஆளேயும் கொன்றுகுவிப்பதிலே முடிகின்றனவோ? காந்தியடிகளது அன்பு நெறி பரவிய இந்த நாளில், இவ்வாறு, எண்ணங்கள் எழுவதும் இயல்பே.

நாவலர் கண்ட நாயனுர் :— பெரிய புராணத்தின் பல வரலாறுகளுக்குச் "சூசனம்" எழுதிய ஆறுமுக நாவலரும், இவரது கொலேத் தொழிலேயே பேரறம் எனச் சிறப்பித்துக் கூறி, அதனே நிலேநாட்டச் சங்கற்ப நிராகரணத்திலிருந்தும்,

"தேசிகர்க்குத் தீங்குசெயும் தீயவரை வெல்; அல்லது நீ
நாசமுறு; சேர்வாய் நலம்."

"அந்தணரை மாதவரைக் கொல்லாதே வெல்; அல்லார்
சிந்தவுஞ்செய்; நீ செறியாய் தீங்கு."

என வரும் இரண்டு குறட்பாக்களை எடுத்துக் காட்டுகின்றார். "சிவனடியார்களுக்கு இடர் செய்வாரைக்கண்டு பிறரும் சிவனடியாருக்கு இடர் செய்து கெடுவர். சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்ய விரும்புவோர்களுள் தீவிர பத்தியுடையாரை ஒழிந்த பிறர், தாம் செய்யும் திருத்தொண்டுகளுக்கு இப்படி இடையூறுகள் நிகழுமாயின், திருத்தொண்டுகள் செய்யாது தம் வாணாளை வீணாளாகக் கழிப்பர். சிவனடியார்க்கு இடர் செய்தாரைக் கொல்லுதல் இத்தீங்குகள் எல்லாவற்றையும் ஒழிக்கும். ஆதலால் இக்கொலை, பாவமாகாமல் அது செய்தாருக்குச் சிவபதம் பயக்கும் என்று துணிக" என அமைதி கூறுகின்றார். இவ்வாறு கூறினாரேனும் பின் நாம் கூறுவதினின்றும், அவர்க்கும் இது கருத்தன்றாதல் நன்கு புலனாகும். "இச்சிவ புண்ணியத்திலே மிக்க சிறப்புற்றவர் இவ்வெறிபத்த நாயனார். இவர் சிவனடியார்களுக்கு இடையூறு வந்த காலத்தில் வெளிப்பட்டு, அவ்விடையூறு செய்தவர்களை மழுவினால் வெட்டுதலே தொழிலாகக் கொண்டமையாலும், சிவகாமியாண்டார் சிவனுக்குச் சாத்தும்படி கொண்டுவந்த பூவைப் பறித்துச் சிந்திய யானை அரசனது பட்டயானை யென்பது பாராமல், அதனையும், அது தீங்குசெய்யாதபொழுது விலக்காத பாதகர்களையும் கொன்றமையாலும் என்க" என்று எறிபத்தரின் முன்னிலையாம் மறநிலையைப் புகழ்ந்துரைக்கும் நாவலர் பெருமானாரே மேற்சென்று, அவ்வடியாரது பின்

னிலையாம் அறநிலையைப் புகழ்வாராய் "இன்னும் இவர் சிவனடியாரிடத்து மிக்க பத்தி உடையோர் என்பது, புகழ்ச் சோழநாயனாரது பக்தி மிகுதியைக் கண்டவுடனே, மிக அஞ்சி, 'தமது யானையும் பாகரும் இறந்துபோகவும் அதைக் குறித்துச் சிறிதும் துக்கம் உறாமல் உடைவாளைத் தந்து தம்மையும் கொல்லும்படி வேண்டுகின்ற இவ்வன்பருக்குத் தீங்கு நினைத்தேனே', என்று, அவ்வாளைத் தமது கழுத்திலே பூட்டி அறுக்கத் தொடங்கினமையாலும் தெளியப்படும்" என்று வற்புறுத்துதல் காண்க. இவ்விருவேறு ஒழுக்க நிலைகளில் எதனைச் சிறந்தது என்று நாவலர் பெருமானார் கூறி யிருப்பர்? நிற்க.

எறிபத்தரது இருவேறு நிலை:—பெரிய புராணம் பேரன்பு நூலேயன்றிப் பெருங் கொலை நூலன்று. "ஈர அன்பினர்" எனத் திருக்கூட்டச் சிறப்பில், சேக்கிழார் பெருமான், தாம் புனைந்துரைக்கும் அடியார்களைப் புகழ்ந்துரைத்தல் காண்க. எறிபத்தரது இரு வேறு மன நிலையைப் புனைந்துரைக்கின்றார் சேக்கிழார் பெருமான். நாயனாரது முன்னையநிலை வன்பு நிலை; பின்னைய நிலை அன்புநிலை. அதனைப் பின்னர்க் காண்போம். முன்னிலையிலும், "முழைவாழ் மடங்கல்" போலத் தோன்றி, இடையூறுகெட எறிவதற்கு மழுவேந்தி நின்ற பெரியராகவே எறிபத்தர் விளங்குகின்றார்.

"மல்லல்நீர் ஞாலந் தன்னுள் மழவிடை யுடையான் அன்பர்க்கு
ஒல்லைவந் துற்ற செய்கை யுற்றிடத் துதவு நீரார்
எல்லையில் புகழின் மிக்க எறிபத்தர் பெருமை எம்மால்
சொல்லலாம் படித்தன் றேனும் ஆசையால் சொல்ல லுற்றேன்"1.

என்றன்றோ சேக்கிழார் தொடங்குகின்றார். அடியார்களுக்கு ஏதேனும் இடையூறு நேரக்கூடிய இடத்து அவ்விடையூறு

நேரா நிலையாதோ, அந்நிலைக்கு ஏற்ற செய்கையால் அவர்களு க்‌கு உதவுவதையே இயல்பாகக் கொண்டவர் இவ்வெறிபத்தர்; வெட்டிக்கொல்வதேமேலாம் நோன்பெனமேற்கொண்டாரல் லர்; இடுக்கண் களைவதே இன்பமென வாழ்பவர். இடுக்கண் களைகையில் கொலை நேரினும் நேரலாம். ஆனால் இவர் கருதி யது அன்பர்க்குச் செய்யும் அருட்பெருந் தொண்டே யன்றி மறப்பெருங் கொலையன்று. இவர் அன்பரது ஆக்கந் தேடி னரே யன்றி அல்லாரது கேடு தேடினர் அல்லர். அல்லாரது கேட்டுக்கும் அஞ்சார் முன்னிலையில்; அல்லாரது கேடும் சூழார் பின்னிலையில். சீறிய அருட்டொண்டு புரிந்தார் முன் னிலையில்; ஆறிய அருட்டொண்டு புரிந்தார் பின்னிலையில். முன்னையது மறவருள்; பின்னையது அறவருள். இந்த மன மாற்றத்தைப் புகழ்ந்துரைத்தல், திருவருட் புலவர்க்கே இயலுவதொன்றாம். இதனைச் சேக்கிழார் எங்ஙனம் புனைந் துரைக்கின்றார் என்பதுபற்றியே இந்த ஆராய்ச்சி எழு கின்றது.

திருவருண் மொழி யுலகு:—சேக்கிழார் படைத் தருளிய திருவருட் பெருக்கெடுக்கும் பாட்டுலகிற் சென்று, பெரிய புராணப் புனைந்துரைகளை, அவற்றோடொன்றாய் இயைந்து ஓதுதல் வேண்டும். அங்கு நேரும் கொலையும் கொடுமையும், துன்பமும் தொல்லையும், ஒருவகையால் நோக்குமிடத்துக் கண்மயக்கேயாம். அன்பர்களது உள்ளத்தொளிவிளக் கானது உலகெங்கும் நிலவினைச்சொரிந்து முருகி எரிகின்றது. அச் செந்நிலையைக்கண்டு அவரோடு இயைந்து இன்பமாய் நிற்றலை விரும்பும் சிவபெருமான், அவ்வன்பின் திரியானது சுடர்விட்டு எரிதற்கு வேண்டுவதொரு நிகழ்ச்சியை நடத்து கின்றான். திருவருளின் திருவிளையாடலே ஈது. புல்லே மழு

வாம். தந்தை காலற்று வீழ்வான். மகன் அரியுண்டு கறியா வான். சுற்றத்தார் துண்டுண்டு துவளுவர். மணமகளாம் கூந்தலழகி மயிர்த்தோகை இழப்பாள். கட்வுள் காட்டும் கண்கட்டே இவையனைத்தும். சிறிது தாழ்த்ததும் அரியுண்ட மகன் தெரு நின்றும் வருவான். அறுத்த கூந்தல் கறுத்து வளரும். வெட்டுண்டு புரண்டயானை சட்டென்று எழுந்து நிற்கும். துஞ்சிய மாவெட்டிகள் துயிலுணர்ந்து யானை ஓட்டுவர். யானை பறித்துச் சிந்திய பூங்குடலையும் நிறை பூங்குடலையாம்.

"தொழுந்தகை யன்பின் மிக்கார்
தொண்டினை மண்மேற் காட்டச்
செழுந்திரு மலரை யன்று
சினக்கரி சிந்தத் திங்கட்
கொழுந்தணி வேணிக் கூத்த
ரருளினாற் கூடிற் றென்றங்
கெழுந்தது. பாகரோடு மியானையு
மெழுந்த தன்றே." 48.

"இருவரும் எழுந்து வானில்
எழுந்தபே ரொலியைப் போற்ற
அருமறைப் பொருளாய் உள்ளார்
அணிகொள்பூங் கூடை தன்னின்
மருவிய பள்ளித் தாம
நிறைந்திட வருள மற்றத்
திருவருள் கொண்டு வாழ்ந்து
சிவகாமி யாரும் நின்றார்." 50.

"மட்டவிழ் அலங்கல் வென்றி
மன்னவர் பெருமான் முன்னர்
உட்டரு களிப்பி னோடும்
உறங்கிமீ தெழுந்த தொத்து

முட்டவெங் கடங்கள் பாய்ந்து
முகிலெனை முழங்கிப் பொங்கும்
பட்டவர்த் தனத்தைக் கொண்டு
பாகரும் அணைய வந்தார்." 51.

எனச் சேக்கிழார் பெருமான் இப் புனைந்துரையிலும் இத் திருவுள்ளக் குறிப்பை விளக்கி வைப்பது காண்க.

அன்பின் திருவிளையாடல்:—ஆதலின், கடவுளின் கண் கட்டு விளையாட்டைக் கண்டு கருத்தழிதல் வேண்டா. இக் கண் மயக்கில் எழுந்து விளங்கும் அன்பு நிலை யாது, என்பதனையே நாம் ஆராய்தல் வேண்டும். அழியாப் பெருவாழ்வாம் அன்பு வாழ்க்கையில் இறப்பேது? பிறப்பேது? திருவருள் கூட்டுவிக்குந் திருவிளையாடலினிடையே திகழ்ந்து விளங்கும் இன்ப அன்பின் எழிலார் வடிவத்தையே, சேக்கிழார் பெருமான் ஓவியமாக எழுதிக்காட்டி, அதனோடியைந்து இன்னிசையாகப் பாடுகின்றார். ஆதலின், அவர் காட்டும் மன நிலையையே நாம் ஆராய்தல் வேண்டும்.

## ௨. நாடு

பாட்டாராய்ச்சி:—எறிபத்தர் என்று எவரேனும் எப்போதேனும் இருந்தாரா, என்ற ஆராய்ச்சியும் வேண்டுவதில்லை. பொய்யையும் மெய்யையும் (**Fact**) கடந்த உண்மை நிலையையே (**Truth**) பாட்டுலகில் காண்போம். அங்கு மெய்யும் இல்லை; பொய்யும் இல்லை; இவை அழிவன. உண்மையே உளது. ஈது அழியாதது. அவ்வுண்மை நிலையைச் சேக்கிழார் எவ்வாறு புனைந்துரைக்கின்றார் என்பதே பாட்டாராய்ச்சியாகும். ஆகவே அவர் பாடல்களையே ஆராய்வோமாக.

யானையை எறிதல்:—

*"பொன்மலைப் புலிவென் றோங்கப் புதுமலை யிடித்துப்போற்று*
*மந்நெறி வழியே யாக அயல்வழி யடைத்த சோழன்*
*மன்னிய வநபா யன்சீர் மரபின்மா நகர மாகுந்*
*தொன்னெடுங் கருவூ ரென்னுஞ் சுடர்மணி வீதி மூதூர்".* 2.

புகழூடம்போடு கூடிய எறிபத்தர் ஒரு யானையை வெட்டி எறிகின்றார்! அரசனுடைய யானையை வெட்டி எறிகின்றார்! அரசனுடைய யானைகளில் தலைசிறந்ததாய் அழகொடு விளங்குவதாம் கொற்ற யானையை வெட்டி எறிகின்றார்! அவன் வழிபடும்யானையை வெட்டி எறிகின்றார்! உலகப் பெருந்தாயை ஒன்பது இரவிலும் வழிபடுந் திருநாளின்போது, அக்கொற்ற யானையை வழிபடுவதும் வழக்கமாய் இருக்க, அந்தத் திருநாளின் போதே வெட்டி எறிகின்றார்! அழகு மட்டுமோ - வழிபாடு ஏற்பது மட்டுமோ- அரசனது வெற்றிக்கே ஒரு துணையாக நின்று பகைப்புலமுருக்கிப் பல்புகழ் படைத்த தன்றோ அவ் யானை? அவ் யானையையன்றோ வெட்டி எறிகின்றார் எறிபத்தர்! அரசனே

னும்குறுநில மன்னனே? மன்னவர்க்கு மன்னவனுய்ப்பொன் மலையைத் தனதெல்லையாகக் கொண்டு புலிக்கொடி நாட்டிய சோழனது யானையையன்றே அவர்வெட்டி எறிகின்றார்! அவ னூரிலேயே யன்றே வெட்டி எறிகின்றார்! பண்டை நாள் தொடங்கி, அவனுக்கு ஆட்பட்ட ஊரிலேயேயன்றே வெட்டு கின்றார்! நத்தப் பாழான ஊரோ அது? அவன் மிக விரும்பி யதன் பயனாக, அவ்வூரின் தெரு முழுவதினும் மணிகளை யிழைத்து அணி செய்து, அறிவில் முதிர்ந்தோரைக் குடி யேற்றி வைத்ததனால், கல்வியாலும் செல்வத்தாலும் முதிர்ந்த ஊராம் அக்கருவூரிலன்றே வெட்டிஎறிகின்றார் அவ்வன்பர்! (தொன்னெடுங்கருவூர் எனப் பழமையைச் சுட்டினர் சேக்கி ழார். ஆதலின் பின்வரும் மூதூர் என்பதற்கு, அறிவில் முதிர்ந்த ஊர் எனப்பொருள் கொள்வதே அவருடைய கருத் துப் போலும்.)

யானையே உயிர்நிலை:—சேக்கிழார் பெருமான், தமது நூலில், நாடும் நகரமும் பாடும்போதெல்லாம், தமது புனைந் துரை வரலாற்றுக் கேற்ப அவற்றைப் புகழ்ந்துரைத்தல் காண்க. இவ்வியானையே இப்புனைந்துரை வரலாற்றின் உயிர் நிலையாகும். இவ்வாறு போற்றப்படுகிற யானையை அஞ்சாது வெட்டி எறிகின்ற அடியாரின் ஆண்மையையும், அதனையும் பொருட்படுத்தாது வணங்கி நிற்கின்ற புகழ்ச்சோழனாரின் அன்பையும், இவ்வியானையின்மேல் வைத்தன்றே உணர்த்து கின்றார் சேக்கிழார்; அதற்கேற்பக் கருவூரையும் யானையின் மேல் வைத்தேயன்றே புகழ்கின்றார்.

பொன்மலைப் புலி:— அநபாயனது முன்னோனாகிய புகழ்ச் சோழன், மண்ணுலக மன்னவனாக விளங்கு கிறான். சேக்கிழார் தமது மன்னனும் அநபாயனை இங்கு

மறக்காது குறித்துவைத்து அவன் பெயர் மறையாதபடி செய்கின்றார்; உப்பிட்டவரை உள்ளளவும் நினைக்கின்றார். உள்ளளவாவது இவரது நூல் உள்ளளவும் என்க. சோழர் களது பெருமையையும் அவர் கூறுகின்றார். பண்டைநாள் தொட்டு இவர்களுடைய நாடு,பனிமலை வரையும் சென்றிருந் தது. அப்பனிமலையாம் பொன்மலையை எல்லைக் கல்லாகக் கொண்டு அதன்மீது தனது புலிக்கொடியைநாட்டினன் ஓர் அரசன். வெற்றிமட்டும் போதுமோ? காடுதிருத்தி நாடாக்க வேண்டாவோ? நாடுசெழிக்க வேண்டாவோ? ஆம்.அவ்வெற் றியை உண்டு பண்ணியது அந்நாட்டு வளப்பமேயாம். அந் நாட்டை அவ்வரசன் வளம்படுத்தியதை ஒட்டக்கூத்தர்,

மேக்குயரக்
கொள்ளுங் குடகக் குவடே டறுத்திழியத்
தள்ளுந் திரைப் பொன்னி தந்தோனும்—தெள்ளருவிச்
சென்னிப் புலியே றிருத்திக் கிரிதிரித்துப்
பொன்னிக் கரைகண்ட பூபதியும்

விக்கிரமசோழனுலா—கண்ணி 12-13

என்று பாடுகிறார். அவன் குடகுமலையை வெட்டிப் பிளந்து காவிரியை இந்நாட்டுக்குக்கொண்டுவந்தானும்;மேற்கே இவன் வெட்டிய வழிக்கு அயல்வழியே போகாதபடி, வழி அடைத்து விட்டானும். வல்லான் வகுத்ததே வாய்க்கால் ஆயிற்று. இக் குடகு மலையும் புதிதாக, அச்சோழர் குடி சேக்கிழாரது புனைந்துரையில் மிகப் பழையதாகின்றது. சோழன் இப் புதுமலையை இடித்துப் பழைய வழியைத் திறந்து விடுகின் றான்: புதியோர் இயற்றிய குறுக்கு வழிகளை அடைத்து விடு கின்றான். இவ்வாறு சோழன் பெருமையைச் சேக்கிழார் புகழ்கின்றார். புகழ்ச் சோழனாரது வெற்றியைப் புகழ்ச் சோழ நாயனாரது புராணத்திற் காண்க.

சேய்மைக் காட்சி:—

" மாமதின் மஞ்சு சூழும்; மாளிகை நிரைவிண் சூழும்;
தூமணி வாயில் சூழும்; சோலையில் வாசஞ் சூழும்;
தேமல ரளகஞ் சூழும்; சிலமதி தெருவிற் சூழும்;
தாமகிழ்ந் தமரர் சூழுஞ் சதமகன் நகரந் தாழ." 3.

என, சேக்கிழார் சேய்மைக் காட்சியைத் தொடர்புயர்வு நவிற்சியாகப் புனைந்துரைக்கின்றார். புகழ்ச்சோழனே கரியானை யேறும் மண்ணுலக வேந்தன். இந்திரனே வெள்ளானை யேறும் விண்ணுலக வேந்தன். யானையைப்பற்றி விண்ணுல கோடு ஒப்புமை பாராட்ட வந்து, அதனைத் தாழ்த்தி விடு கின்றார் சேக்கிழார். "இன்பவுலகம்", என்று விண்ணவர் மகிழ்ந்து திரியும் துறக்கம், இக் கருவூரை நோக்க நம்மெதிரே கீழே தாழ்ந்தே தோன்றுகிறது. கருவூர் அவர்களுரைக் கடந்து செல்கிறது. உயர்த்திப் புகழ்கிறார்' என்று கொள் ளாது, கருவூரின் சேய்மைக் காட்சியையே, சேக்கிழார் புனைந் துரைக்கின்றார் எனக் கொள்ளுதல் வேண்டும். கருவூரின் நீண்ட மதில்களின்மேல் அழகிய முகிற்கூட்டங்கள் சூழ்ந்து கிடக்கின்றன. எனவே, விண்ணாட்டு முகில் வட்டத்தையும் கடந்து செல்கின்றது இக்கருவூர் என்பதாயிற்று. அம் மதிற்குள்ளாக ஓங்கி உயர்ந்த மாளிகைகள், குறுக்கும் நெடுக்குமாக நம்மூரில் இதுபோது காணப்படுவது போலல் லாது, ஒரு நிரையாக நிற்பதே ஓர் அழகு. அம்மாளிகை களோ வானத்தை முட்டி நிற்கின்றன. எனவே, வான வட் டத்தையும் கடந்து நிற்கின்றது கருவூர் என்பதாயிற்று. வாயில்கள் திறந்திருத்தலை எதிரே எதிரே காண்கிறோம். வானவிளிம்பில் எழுகின்ற தூமணியாம் செங்கதிரோன் அவ்வாயில்களூடே திகழ்கின்றான்; வானவழியிற் செல்ல

மாட்டாது இவ்வாயில்கள் வழியே சூழ்ந்து வருகின்முன் போலும். இவ்வாறு செங்கதிர் வட்டத்தையும் கடக்கின் றது அக்கருவூர். அவ்வூர் மகளிர் தம் கூந்தலில் தேனெடு திகழும் மலர்களை, அன்றலர்ந்த செவ்வி வாடாது முடித் துள்ளனர். அம்மலர்களின் நறு நாற்றமே விண்ணவர் களது விரும்பியதளிக்கும் பெரும்பொழிலிடையே (கற் பகவனம்) சென்று சூழ்ந்து, விண்மலரின் இன்மணமாகும். தொலைவிலிருந்து பார்ப்பார்க்குப் பொழில்கள் வானளாவி நிற்பன போலத் தோன்றும் அன்ருே? தேமலர் சூடிய கூந்த லால் சூழப்பெற்ற திங்கள்கள் (முகங்கள்) ஈதோ அக்கருவூர்த் தெருவழியே சூழ்கின்றனவே. செய்மைக்காட்சியில் பெண் கள் முகங்கள் திங்கள் எனத் தோன்றுகின்றன. தெருவில் நடக்கும் இந்நிலையில் திங்கள் வருமாறுல் இவ்வூர், திங்கள் வட்டத்தையும் கடக்கின்றதன்ருே ?

அணிமைக் காட்சி - புறத்தோற்றம்:—

"கடகரி துறையி லாடும்; களிமயில் புறவி லாடும்;
அடர்மணி யரங்கி லாடும்; அரிவையர் குழல்வண் டாடும்;
படரொளி மறுகி லாடும்; பயில்கொடி கதிர்மீ தாடும்;
தடநெடும் புலிகொண் டாடுந் தனிநகர் வளமை யீதால்." 4.

எங்கும் இன்பக்கூத்து. மதிலும் மாளிகையும், வாயி லும் மகளிரும், மலரும் மணமும், பொழிலும், கூந்தலும் காண்கின்ருேம். மேற்சென்ற அணிமைக் காட்சியால் அவ் வூரின் இன்பத்தைப் புகழ்கின்ருர் சேக்கிழார். வெள்ளானை யுலகையும் கடந்த இக்கரியானை யுலகாம் கருவூரிலன்ருே யானையை எறிகின்ருர் எறிபத்தர். 'யானையால் அழகு பெற்ற ஊரிலன்ருே யானையை எறிகின்ருர்' என்ற குறிப்

புத் தோன்றப் புகழ்கின்றார் சேக்கிழார். யானையால் அழகு பெற்ற இவ்வூர், அவ்வழியே இன்பம் கூத்தாடும் கோயிலு மாகக் குலவுகிறது. இன்பம் மிகுந்தபோது அதற்குப் போக்கு வீடாகக் கூத்தே ஆடுவோம். பேரின்ப வடிவான பெரியோனும் பெருங்கூத்தே யாடுகின்றான். இவ்வூரும் இன்ப வடிவினதென்றால், எங்கும் கூத்தெழ வேண்டாவோ? ஈதோ பார்மின். விலங்குகளும் ஆடுகின்றன; பறவை களும் ஆடுகின்றன; மகளிரும் ஆடுகின்றனர்; உயிரில்லாப் பொருள்களும் உவகைக் கடலில் ஆடுகின்றன. களித் துத் திரியும் யானைகள் நீர்த் துறைகளில் இறங்கித் தும்பிக் கையால் "குட குட" என நீர் உறிஞ்சிப் பின்னுடம்பில் விசிறி விளையாடுவது, கண்கொண்டு காணத்தக்க காட்சியே யாம். நீர்த் துறைகளில் அத்தகைய களிப்பு மிகுகின்றது. வெட்ட வெளியிலோ, மயில்கள் செங்கதிர்க் கெதிரே பைங் கதிர் எனத் தோகையை விரித்துத் தமது கழுத்தைச் செரு க்கி வளைத்துக் கால் மாறி அசைந்தாடுகின்றன. வெட்ட வெளியும், தண்ணீர்த் துறையும், அவ்வாறாக, ஆறறிவு படைத்த மக்கள் வாழும் இடத்தோ, இயற்கை யழகோடு செயற்கை அழகும் இன்பத்தைப் பெருக்குகின்றன. எழி லார் இளமங்கையர் கூத்தே யாடுகின்றனர். சுற்றிலும் கல் லிழைத்த கூடம் மின்னிப் பொலிகிறது. அதனிடையே இம்மகளிர் ஆடும் ஆட்டத்தின் நிழல், அம்மணிகளில் வீழ் தலும், எதிரொளி வடிவாய்ப்பலநூறு கூத்துக்கள், அம்மணி களினிடையே, நிகழ்கின்றன. அம்மகளிர், கூத்தாடும்போது குதித்தெழுந்தோறும் அவர்கள் கூந்தலிற் சூடிய பூக்களி னின்றும், வண்டுகள் திடுக்கிட்டெழுந்து மேற் பறக்கின்றன; நின்றதும் அப்பூக்களின்மேல் அமர்ந்து விளங்குகின்றன.

இவ்வாறு இயற்கையால் ஒளிரும் வண்டும், செயற்கையால் ஒளிரும் மணியும், இவர்களோடு ஒன்றுயியைந்தாட, அறிவொடு அழகு வடிவாம் இம்மகளிர் ஆடும் அவ்விடமன்றே, இயற்கையன்னையின் உயிர் நிலையாகும்; உலப்பிலா இன்ப ஊற்றாகும். அம்மட்டோ? உயிரிலாப் பொருள்களும் அல்லவா அங்கே ஆடியின்புறுகின்றன. வீடுகளில் கட்டிய கொடிகளில் இழைத்த மணிகளினிடத்தே கதிரவனொளி பாய்கின்றது. அதனால், அம்மணிகளில் எழுந்த எதிரொளி தெருவில் நிழலிடுகின்றது. காற்றில் இக்கொடி யசையுந்தோறும் இவ்வெதிரொளியும் தெருவூடே கூத்தாடும் அன்றோ? இக்கீழ் நிலைக் கூத்திவ்வாறாக, மேனிலைக் கூத்தொன்றும் அங்கு உண்டு. அக்கொடிகள், வானளாவி நிற்றலின், கதிரவன்மீது அசைந்து கூத்தாடுகின்றன. நீரில்ஆட்டம், வானில் ஆட்டம், மணியில் ஆட்டம், மலரில் ஆட்டம், வெளியில் ஆட்டம், ஒளியில் ஆட்டம், கதிரில் ஆட்டம், தெருவில் ஆட்டம், அறையில் ஆட்டம், பறவையின் ஆட்டம், விலங்கின் ஆட்டம், வண்டின் ஆட்டம், மகளிர் ஆட்டம், கொடியினாட்டம், எங்கும் ஆட்டம், எல்லாம் ஆடுவன. ஈதே இவ்வூரின் இன்பவளம். இதனைச் சேக்கிழார் உலகில் ஒப்பிலா ஊர் என்று கொண்டாடுகின்றனர்.

அகத்தோற்றம்:—

" மன்னிய சிறப்பின் மிக்க வளநக ரதனின் மல்கும் [பாற்
பொன்னியல் புரிசை சூழ்ந்து சுரர்களும் போற்றும் பொற்
றுன்னிய வன்பின் மிக்க தொண்டர்தஞ் சிந்தை நீங்கா
அந்நிலை யரனார் வாழ்வ தாநிலை யென்னுங் கோயில்." 5.

என்று அகத் தோற்றத்தைக் கூறுகின்றார் சேக்கிழார்.

இன்பமாம் இறைவன்:—ஆட்டமனைத்தும் புறத்தோற்றம். இந்தஆட்டம் எழுந்தது, உள்ளே பொங்கிய இன்பத்தாலன்றோ? பேரழகுள்ள இடத்தில் பேரின்பவடிவனும் இருப்பான் அன்றோ? இமை கொட்டுந்தோறும் கட்டழகின் காட்சிக்கு இடையீடு நேர்கின்றது. ஆதலின் இமையாது கண்டு களிக்கும் பேறுபெற்ற இமையவர்கள் எங்குள்ளார்கள்? தாம் பெற்ற பேற்றிற்கேற்ப, இமை கொட்டாது பார்க்கத் தகும் ஏரெழில்நிறைந்த இடத்தன்றே இருப்பார்கள். அழகு வழிபாடு செய்யும் அவ்வானவர்கள், இவ்வூரைக் கண்டால் இமைப்போதேனும் பிரிவரோ? அழகின் அருமை நோக்கி, இவ்வூரின் பொன் மதிலைச் சுற்றிச் சூழ்ந்து, அவர்கள், போற்றுகின்றனர். அத்தகைய பொற்பினைக் கண்ட அன்பர்களும் அப்பொற்பால் வலித்திழுக்கப் பெற்றவர்களாய் அவ்வூரில் நெருங்கியுள்ளார்கள். ஊனக்கண் கொண்டு காணும் நிலையிலா உடனிலையழகைக் கண்டு களிப்பதோடு அமையாது, அதிற்றோய்ந்து அதனுள் ளொளிரும் உண்மையழகையும் காணவேண்டி, ஊடுருவிச் சென்று உள்ளக் கண்கொண்டு காணும் நிலையான உயிர்நிலை யழகையும் கண்டு களிப்பவர்களல்லரோ அவ்வடியார்கள். அங்கொரு இமையா நாட்

டம் பெற்றவரல்லரோ அவ்வடியார்கள். இயற்கை யழகு வழியே இறைபணி நிற்கின்றவர்கள் ஆதலின், அவர்கள் செயலனைத்தும் திருத்தொண்டேயாம். அவர்கள் எங்கும் அழகைக் கண்டு அவ்வியற்கை யழகாம் இறைவனுக் கடிமை யாகின்றனர்; நான் என்றும் நீ யென்றும் எனதென்றும் உனதென்றும் பேசுவதை மறக்கின்றனர்; இயற்கையோ டொன்றாய் இயைகின்றனராதலின், அழகுக்கடியராய், அவ் வழகாம் உலகுக்குமடியர் ஆகின்றனர் ; ஆதலினாலே தமக் கென வாழாப் பிறர்க்குரியாளராகத் தலைசிறந்து விளங்குகின் றனர். அதற்கேற்ப ஆண்டவனும் அவ்வழகிய நிலையாகிக் காட்சி தருகின்றான்; அவர்களது உள்ளங் கவர்ந்த கள் வனாய் (அரன்) அவர்களோ டியைகின்றான். உள்ளும் புற மும் வெள்ளமாய்ப் பொங்கும் அழகிடையன்றோ, ஆண்ட வன் அகனமர்ந்து உறைகின்றான். அழகன்றோ அவனுடைய திருக்கோயில். ஆநிலை என்ற அவனழகார் கோயிலும், அக் கருவூரில், பரந்த பால் திரண்டெழுந்து வெண்ணெயாதல் போல, அழகு திரண்டு எழுந்து விளங்குகின்றது.

பொருட்டிருமறையும் அருட்பெருந் தொண்டும்:—

"பொருட்டிரு மறைக டந்த புனிதரை யினிதக் கோயின்
மருட்டுறை மாற்றும் ஆற்றால் வழிபடுந் தொழில ராகி
இருட்கடு வொடுங்கு கண்டத் திறையவர்க் குரிமை பூண்டார்க்(கு)
அருட்பெருந் தொண்டு செய்வார் அவரெறி பத்த ராவார்." 6.

ஊன்றிப் பார்ப்போர்க்கு, உலகின் ஒவ்வொரு துகளும், இவ் வுயர்ந்த பொருளின் உண்மையை மறைவாக எடுத்துக் கூறு கின்றது. இவ்வாறு அவற்றை இயைவித்துத் தன்னருட் பெருக்கால் அத்திருமறை யுண்மைகளை, உலகத்திற்குத் தந் துதவிய தூயோனை, அவ்வாநிலைக் கோயிலில் வழிபடுபவர்

அந்த எறிபத்தர். ஒளியும் இன்பமும் அழகுமாம் இவ்வழி யினின்றும் பிறழ்ந்தால், இருளும் மருளும் துன்பமுமாம் வழியேதான் போதல்வேண்டும். எனவே, அம்மருள் வழியை அடைப்பதே, அருள் வழியைத் திறப்பதாகும். அதனை மேற் கொண்டார் எறிபத்தர்.

இருட்கடு ஒடுங்கும் கண்டத் திறையவர்க் குரிமை பூண் டார்:—ஆண்டவன் அருள்நிலை இருந்தவாறு என்னே! என்னே !! பிறர் துன்பத்தைத் தனது இன்பத்திற் கெரிகரும் பாய்க் கொண்டு எரித்துப் போக்கித் துன்பமும் இன்பமும் எல்லாமாய் விளங்குகிறுன் இறைவன். துன்பத்திலும் ஓர் இன்பம் காட்டுவிக்கவேண்டி, அதனைத் தக்கதோரிடத்தே இயையவைத்து அங்கோர் ஏரெழில் காட்டுகின்ற இறைவன் பெருமை இருந்தவாறு என்னே! உலகிலே எதனைத் தீயது என்போம்.பொருத்தமின்மையே பொங்கு துயராகும். உண விடைவைத்த எருவோ ஒக்காள மாகின்றது. மருக்கொழுந் தின் வேரிடையிட்ட எருவோ, பின்னர்நகைமுகமூட்டும் நறு மணமாகின்றது. கடலிடையே எழுகின்ற கடு, கடவுளுடைய கழுத்தின்கண் கருமணியாய்த் திகழ்கின்றது. பொருத்து வாயறிந்து பொருத்துவிக்கும் இத்தகைய இறைவனது இயற் கைவழியே நிற்கின்றவர்களே அடியார்கள். அவர்கள் தம் பொய்த்திறனெழிந்து அவன்மெய்த்திறத்தேநின்று, தம்செய லென ஒன்றின்றி, எல்லாம்அவன்செயலென உணர்ந்துஒழுகு கின்றனர்; அவன் அழகு வெள்ளத்தோடே இயைந்து, புரண் டோடித் தம்முடல் பொருள் ஆவி மூன்றையும் அவனுக்கே உரிமையாக்கி, அவ்வின்ப ஆற்றில் அவற்றைக் கன்னலெனக் கரைக்கின்றனர். இவ்வாறு இறைவனேயாகி இறைபணி நிற் கின்ற அடியார்களது பெருமையை என் என்பது! இவர்களே

விட்டு, இறைவனைத் தேடி வழிபடுதலும் வேண்டுமோ? இவ் வடியார்க்கு அருட்பெருந் தொண்டு செய்வதே போதிய தன்றோ? இவ்வருட் பெருந் தொண்டினைத் தடை நீக்குதல் என்ற எதிர்மறை வழியால் செய்து வருகின்றார் எறிபத்தர். விதை விதைத்தல் போலக் களைகட்டலும், விளைவுக்கு இன்றி யமையாத தன்றோ?

மழை வளருலகில் ஒரு முழையரி:—

"மழைவள ருலகில் எங்கு மன்னிய சைவ மோங்க
அழலவிர் சடையா னன்பர்க் கடாதன அடுத்த போது
முழையரி யென்னத் தோன்றி முரண்கெட வெறிந்து தீர்க்கும்
பழமறை பரசுந் தூய பரசுமுன் னெடுக்கப் பெற்றார்." 7.

இவ்வழகிய இன்ப வாழ்க்கைக்கு இந்நாட்டில் ஏதேனும் தடை உண்டோ? மழை வளர, வான் பயிர் வளர, மன்னுயிர் வளரும் இந்நாட்டில், எதை நாடி, நாம் அலைதல் வேண்டும். இவ்வளர்ச்சியினிடையேயே, இயற் கையின் இன்னிசைப்பாடலையும், இறைவனின் அழகிய ஆடலையும், நாம் காணவில்லையா? இவ்வழியை அறிதலி லேனும் அருமையுண்டோ? மறையாய் விளங்கும் இன்ப அன்பினழகு, இவ்வுலகெங்கும் மன்னிப் பொலிகின்றது; பொங்கி வழிகின்றது. அதனை நாம் சிறிது ஊன்றிப் பார்த் தால், அதனை எங்கும் காண்கின்றோம் அன்றோ! எங்கும் நிலைபெற்ற இவ்வின்ப அன்பாம் அழகொளி, ஓங்கிவளர் கையில், சுடர்த்திரியில் கட்டும் கரியினைத் தட்டி யுதிர்க்க வேண்டாவோ? துன்பத்தையும் தனதெரிகரும்பாய்க் கொண் டு, சுட்டெரித்துத் தூயதாய் ஓங்கும் இவ்வின்பத்தீயின் அழ கினையும், இன்பத்தினையும், மேற்பரவாதபடி எதிர்த்தழிக்க முயல்வார், மறலியினும் கொடிய மறவோராவர். முழையில்

வாழும் மடங்கல், முழையினின்றும் திடீர் எனத் தோன்றுவது போல, இவ்வின்ப அன்புக்கு ஏதேனும் இடையூறு ஏற்பட்டபோது, சடுக்கென வந்து, அவ்விடையூற்றை அடியோடு களைவர் இவ்வெறி பத்தர்.

தூயபரசு:—அவ்வாறு களைதற்கறிகுறியாக இறைவனது தூய மழுவையே துணையாகக் கொண்டுள்ளார் எறிபத்தர்; தமக்கொன்று வேண்டி மழுவெடுக்கின்றார் அல்லர். உலகிடை மறையாய் நின்ற இன்ப வழியைப் பின்பற்றி இறைபணி நின்றவராதலின், இவருடைய மழுவிலே பற்றென்ற கறையொன்றும் இல்லை. ஆதலின் அது தூய்மை மிக்க மழுவாகவே விளங்குகின்றது. களைவெட்டியாம் கடவுள் மழுவைக் கையில் எடுத்ததும் இவர்க்கொரு பேறேயன்றோ? இன்ப வழியில் செல்லத் தொடங்கி நின்ற நிலையே ஈது. சென்று முற்றிய நிலையைப் பின் காண்போம். இங்குத் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராம் இவர், முழை வாழ் மடங்கல் என விலங்கோடு ஒப்புமை பெற்று அவ்வழியில் இயற்கையோடு இயைபு பெறுகிறார். இந்நிலையினின்றும் கடவுள் நிலையை அடைவதனையே சேக்கிழார் இப்புனைந்துரையில் குறிக்கின்றார்.

## ச. முதற் காட்சி - பூத்தொண்டு

கூத்து நூல்:—சேக்கிழார், கூத்து நூலும் யாக்க வல்ல பெரும் புலவர்; மன நிலையைச் சொற்கள் கொண்டே உயிர் ஓவியமாக எழுதிக் காட்டும் கைசிறந்த ஓடாவி. அன்பே வடிவான சிவகாமி யாண்டார், ஒருதிருமலர்த் தொண்டர். அவர், ஆண்டவனரது அழகிய மலரொப்பனையைக் கண்டு களிக்க விரைந்து செல்லும் ஆர்வத்தையும், ஆனையானது அவரது பூங்குடலையைப் பறித்தபோது, அதிலிருந்த மலர்களுக்காகப் பரிந்த பரிவையும், அவ்வானையினின்றும் பூங்குடலையைப் பறிக்கத் தடியெடுத்து அடிக்கச்சென்று தப்பித் தரையடித்து வீழ்ந்து அலமரும் நிலையையும், இக் கூத்தின் முதற் காட்சியாகக் கொண்டு, புனைந்துரைக்கின்றார் சேக்கிழார். ஈதே சிவகாமியாண்டாரது ஓவியம் என்க.

சிவகாமியாண்டாரின் திருப்பள்ளித் தாமம்:—

"அண்ணலார் நிகழும் நாளில் ஆநிலை அடிக ளார்க்குத்
திண்ணிய அன்பு கூர்ந்த சிவகாமி ஆண்டார் என்னும்
புண்ணிய முனிவ னார்தாம் பூப்பறித்(து) அலங்கல் சாத்தி
உள்நிறை காத லோடும் ஒழுகுவார் ஒருநாள் முன்போல்." 8.

"வைகறை உணர்ந்து போந்து புனன்மூழ்கி வாயுங் கட்டி
மொய்ம்மலர் நெருங்கு வாச நந்தன வனத்து முன்னிக்
கையினில் தெரிந்து நல்ல கமழ்முகை யலரும் வேலைத்
தெய்வநா யகர்க்குச் சாத்துந் திருப்பள்ளித் தாமங் கொய்து." 9.

"கோலப்பூங் கூடை தன்னை நிறைத்தனர் கொண்டு நெஞ்சில்
வாலியநேசம் கொண்டு மலர்க்கையிற் றண்டுங் கொண்(டு) அங்(கு)
ஆலய மதனை நோக்கி அங்கணர்க்(கு) அமைத்துச் சாத்தும்
காலைவந்(து) உதவ வேண்டிக் கடிதினில் வாரா நின்றார்." 10.

சிவகாமியாண்டார் என்போர் அறநிலை பிறழாத அற வோர்; நிறைமொழி மாந்தராய் (முனிவர்) நின்ற அந்தணர் பெருமானூர். இவர், மலையெனத்துளக்கலாகாத பேரன்புடை யார். பெருமானிடத்தே இவர்தம் பேரன்பும் பெருகிவளர்கின் றது. கடவுண்மாட் டெழுந்த காதலே இவருடைய உள்ளம் நிறையநிற்கின்றது. வேறொன்றை எண்ணவும், பேசவும், செய் யவும், அவ்வுள்ளத்தே இடமில்லாதபடி, இக்காதல் வெள் ளம், நிறைந்து பொங்குகின்றது. அவ்வன்பு வாழ்க்கையையே, பேரொழுக்கமாகப் போற்றி, அன்புவடிவாக இவர் வாழ்ந்து வருகின்றூர்; அவ்வன்பிற்கும் அவ்வின்பத்திற்கும் போக்கு வீடாகப் பூப்பறித்து அலங்கல் சாத்தியும், ஆண்டவனூது அழகு மலர் ஒப்பனையைக் கண்டு களித்தும், அக் களிப்புக் குப் போக்கு வீடாகப் பூப்பறித்து அலங்கல் சாத்தியும், மாறி மாறித் தன்னுள் தானே உருண்டு வரும் அன்பு வட் டத்திற்குள் அகப்பட்டு, இன்ப ஒளியாய் விளங்குகின்றூர்.

பூநோன்பு:—சிவகாமியாண்டார் பூப்பறித்து அலங்கல் சாத்துதலை ஒருநோன்பாகக் கொண்டுவாழ்ந்து வருகின்றனர்; பொழுது புலர்வதன் முன்னம் துயிலொழிந்து, எழுந்து போந்து, தூயநீரில் மூழ்கி உள்ளும்போல் புறமும் தூயரா கின்றூர்; தாம் பறிக்கும் மலர்களில், வாயிலிருந்தூறும் எச்சிற் படாதபடி, வாயைக் கட்டிக்கொள்கின்றூர்; நறுமணங் கமழுமாறு நன்கு மலர்ந்த நந்தவனத்திடையே இறை வனது இன்ப அன்பையே, எண்ணிக்கொண்டு, புகு கின்றூர். இப்பெரியார், இவ்வறத்துறையில் எவ்வளவு கைதேர்ந்தவர் என்பதனை, இவர் மலர் பறிப்பதினின்றுமே கண்டறியுங்கள். மலர்களிற் சிறந்தனவாயும், இறைவன்மீது சாத்தும் வேளையில் எவர் மனமும் மணத்தோடு விரிந்து

இன்பமாய் மலரும்படி நறுமணம் வீசி நலம் சிறந்து நகைத் தொளிகான்று நன்கனம் மலரத் தக்கனவாயும், பறிக்கும் போது முகைவிரிந்தலரும் பூவின் முன்னிலையில் நின்று, போதாய் விளங்குவனவாயும், பொலிவனவற்றை மட்டும் அவ்விருட்டில், தம் கையால், தொட்டுப் பார்த்தபடியே பறிப்பதைப் பாருங்கள். இவர் இயற்கையோடு இயைந்த இயைபே இயைபு. அலரின் நுட்ப இன்பத்தை ஊற்றறி வால் அறிந்து, இறைவன் வடிவமாம் மெய்யுணர்வெய்தி நின்று, இயற்கையோடு இயைபுண்டு, இன்பம் துய்க்கும் இவருடைய ஐயுணர்வினை என் என்பது ! கல்லும் கானும் பாடும் கடவுட் பாடல்களை அறியும் புலவர்களைப்பற்றி "ஷேக்ஸ்பியர்" கூறுகின்றது, இத்தகையோரைப் பற்றியே யாம். இவர் கையறிவால் நன்மலர்களின் மென்மையை யறிந் ததுபோல, அம்மலர்கள் விரிந்தெழுகையில் வண்டுகளின் இன்னிசையாய் எழும் பாட்டையும் இனிதே துய்த்து, வண் டொடும் பாடுவார்போலும். வண்டே போல்வார், வண்டுக ளது மலரறிவு பெற்று, வண்டு மூசும் நிலையையும் உணர்ந்து, வண்டு மூசுவதால் எச்சிற்படுமுன்னரே பறிக்கின்றனர்; ஆனால் வண்டு மூசும் நிலைதான் மலர்சிறக்கும் நிலையாதலின், அந்த நிலையினழகும் குறையாதபடி முற்றிய நிலையில், வண்டு மூசுதற்கு ஒரிமைப்போது முன்னர்த்தான், பறித்துக் கொள் கின்றனர். ஈதன்றோ ஈங்குள்ள அருமை. நாமும் மலரினைக் காண்போம்; முகர்வோம்; அதன் தேனினைச் சுவைப்போம். ஆனல், இவர்போல அதன் நுட்பத்தை உற்றறியோம். தேமலர் வண்டென வாழ்ந்து, கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியும், இவரது கடவுள் வாழ்க்கையின் நுட்பத்தை, என்னென்று புகழ்வோம். அதனை இவர் அறிவார்;

இறைவன் அறிவான்; இயற்கை யன்னை யறிவாள். இம் மூவரும் ஒத்து நின்ற அன்பு வடிவினைச் சேக்கிழார் மிக அழகாக இவ்வாறு எழுதிக் காட்டுகின்றார்.

கோலப் பூங்குடலை:—இறைவனுக்குச் சாத்தும் மலரைக் கொண்டு செல்லுதற்கென்றே, கைத்திறமனைத்தும் காட்டிக் கண்கவர் வனப்புடைய பூங்குடலை யொன்றனை இவர் முடைந்து வைத்திருக்கின்றார். அன்புவாழ்க்கை வாழ்வோரைச் சுற்றிலும், இவ்வாறு, அழகன்றோ திரை புரளும். உடையிலும் அழகு, ஊணிலும் அழகு, நடையிலும் அழகு, குளிப்பதிலும் அழகு, களிப்பதிலும் அழகு, உடலும் அழகு, பூங்கூடலையும் அழகு; இவரைச் சுற்றி எங்கும் அழகே உள்ளது. அன்புகண் கொண்டு கண்டாலன்றோ அவ்வழகு புலனாகும்.

கடிதினில் வாராநின்றார்:—சிவகாமியாண்டார் தமது உள்ளத்தில் அன்பு நிறைய நிறையப் பூவை நிறைத்து வைத்திருக்கின்றார். உள்ளத்தும் பூங்குடலையிலும், நிறைந்த அன்பே வெள்ளமாய் பொங்கி வழிந்து, இவரைத் தள்ளிக் கொண்டு போகின்றது. இவர் தூய அன்புகொண்டு விரைந்து செல்கின்றார். ஏதேனும் ஒன்றை வேண்டிநிற்கும் அன்போ ஈது. ஏன் விரைகின்றார்? எதுபற்றி இவர் இறைவனை வழிபடுகின்றார்? எதுபற்றி இன்பந்துய்க்கின்றார்? இன்பமே எவற்றிற்கும் முதலும் முடிவுமாயபோது, அது, தனக்கன்றி மற்றொன்றிற்கு முதலாவதேது? வீடும் வேண்டா விறலின் விளங்குகின்ற இப்பெரியார், வேண்டுவது ஒன்றும் இல்லை. மலரின் நுட்பத்தைத் தொட்டுணரும் அவரது திருக்கை, மெல்லிய மலரும் தைவரக்கூசும் மெல்லிய மலர்போன்

றன்றோ விளங்குகின்றது. அந்த மலர்க்கையில், முதுமை யின் கொடுமைக்கஞ்சி, தடியொன்றூன்றிக் கோயில் நோக் கிப் போகின்றார் இவ்வன்பர்; இறைவனுக்கு ஏற்ற மாலைகள் சாத்தும்போது வந்துதவுதற்காக விரையு மனத்தோடே, விரைந்து வருகின்றார்.

பூத்தொண்டின் புதுமை:-இவர் அன்பினை என் என்பது! இவர் யாதும் குறையிலர்; யாதும் வேண்டிலர்; அன்பால் உந்தப்பட்டு, மக்களறிந்தபேரின்பமாம் தூக்கத்தையும், அதனினும் இனியதாய்த் தாம்கண்ட காட்சியை எண்ணித் துறக் கின்றார்; தடியூன்றித் தட்டித்தடுமாறி நடக்கும் அம் முது மையில் அவ்விருட்டிற்சென்று, குளிர் என்றும் பாராது கோமானின் கோலத்தை எண்ணிக் குளித்தருள்கின்றார். அவ்வொப்பனைப் பொருளை எத்துணைத் தூயதாகக்கொண் டருளுகின்றார் இப்பெரியார்? வண்டு மூசாமலரை வாய் கட்டிப்பறிக்கும் அவ்வன்பின் தூய்மையை என் என்பது? கையே துணையாய் மலர் பறிக்கும் கடவுளன்பை என் என் பது? இன்பத்திற்குப் போக்குவீடாக இத்துணையும் செய்து, அன்பு மணக்கும் பூக்கொண்டு உள்ளத்துண்மைக் கியைந்த வாறு புனைந்த பொய்யாத மெய்யொப்பனையைக் கண்டு களிக் கின்றார் இத்தொண்டர். இன்பத்தில் எழுந்து இன்பத்தில் முடியும் இவ்வழிபாட்டை அன்பு கண்கொண்டு காணுதல் வேண்டும். அப்போதுதான் இவ்வழகு விளையாட்டின் இன்ப நுட்பமும் அன்பின் திட்பமும் புலனாகும்.

யானையின் வருகை:—

இவ்வாறு சிவகாமி யாண்டார் விரைந்தொரு தெரு வழியே போகின்றார். மேலே யானை வருவதைப் புனைந்து ரைக்கின்றார் சேக்கிழார்.

"மற்றவர் அணைய இப்பால் வளநக ரதனில் மன்னும்
கொற்றவர் வளவர் தங்கள் குலப்புகழ்ச் சோழ னூர்தம்
பற்றலர் முனைகள் சாய்க்கும் பட்டவர்த் தனமாம் பண்பு
பெற்றவெங் களிறு கோலம் பெருகு மா நவமி நன்னாள்". 11.

"மங்கல விழவு கொண்டு வருநதித் துறைநீ ராடிப்
பொங்கிய களிப்பி னோடும் பொழிமதஞ் சொரிய, நின்றோர்
எங்கணும் இரியல்போக எதிர்பரிக் காரர் ஓடத்
துங்கமால் வரைபோல் தோன்றித் துண்ணென அணைந்த(து) அன்
[றே." 12.

"வென்றிமால் யானை, தன்னை மேல்கொண்ட பாகரோடும்
சென்(று)ஒரு தெருவின் முட்டச், சிவகாமி யார்முன் செல்ல
வந்தடித் தண்டில் தூங்கும் மலர்கொள்பூங் கூடை தன்னைப்
பின்தொடர்ந்(து) ஓடிச் சென்றுபிடித்(து)உடன் பறித்துச் சிந்த."
13.

"மேல்கொண்ட பாகர் கண்டு விசைகொண்ட களிறு, சண்டக்
கால்கொண்டு போவார் போலக் கடிதுகொண்(டு) அகலப்போக
நூல்கொண்ட மார்பிற் றொண்டர் நோக்கினர் பதைத்துப் பொங்கி
மால்கொண்ட களிற்றின்பின்பு தண்டுகொண்(டு) அடிக்கவந்தார்."
14.

"அப்பொழு(து) அணைய ஒட்டா(து) அடற்களி(று)அகன்று போக
மெய்ப்பெருந் தொண்டர் மூப்பால் விரைந்துபின் செல்ல மாட்டார்
தப்பினர் விழுந்து கையால் தரையடித்(து) எழுந்து நின்று
செப்பருந் துயரும் நீடிச் செயிர்த்துமுன் சிவதா என்பார்." 15.

கூத்துநூற் கோலாட்டத்தெழுந்த கடவுட் பிணையல்:— கூத்து நூலிலே வரும் புனைந்துரை வரலாற்றின்போக்கை ஆராய்வோமானால், முதலிலே அவ்வரலாறு பல பிரிவு களாக நிற்பதனையும், புனைந்துரை, மக்களின் செயல்

வழியே சிக்கலாய் முடிச்சுப் பெறுவதனையும், பின்னர் அது அவர்கள் செயல் வழியே முடிச்சு அவிழ்ந்து வருவதனையும் காண்போம். இப்புனைந்துரையில் யானையைச் சுற்றித்தான் முடிச்செழுகின்றது. மற்றைய கூத்து நூல்கள்போல இப் புனைந்துரையும் ஒரு கோலாட்டமேயாம். கோலாட்டமாடு கையில், மேலிருந்து தொங்கும் கோலக்கயிறு ஒவ்வொன் றையும், ஒவ்வொருவர் பிடித்துக் குறுக்கும் நெடுக்குமாக வெவ்வேறு பிரிந்து, பாட்டிற்கேற்பக் கோலைத்தட்டிச் சுற்றி வருகையில், கயிறு பின்னிக்கொள்ளும். பின்னர், முன் செய்தபடி, பாடிச்சுற்றி வருகையில், அப் பிணையலும் அவிழ்ந்துவிடும். அவ்வாறே புனைந்துரை வரலாற்றிலும் ஒரு கடவுட் பிணையல் பின்னிக் கொள்வதனையும், பின்னர் அவிழ்ந்து விடுவதனையும் காண்கின்றோம். கோலாட்டத்தில் பயின்று சிறந்தவர்களே சிக்கலின்றிக் கட்டவிழ்த்து நிற்க வல்லார். அஃதேபோலத் திருவருட் புலவர்களே, கடவுட் பிணையலைப் பின்னி யவிழ்க்கத் தக்கார். எறிபத்தரது புனைந் துரை வரலாற்றில் யானையைச் சுற்றியே கடவுட் பிணையல் பின்னிக் கொள்கிறது

பட்டவர்த்தனம்:—இந்த யானையைப் பற்றி முன்னரே கூறினோம். மன்னர் மன்னவன் - வெற்றியன்றி மற்றொன் றறியா மன்னவன் - வளவர்தம் பழங்குடி வந்த மன்ன வன் - அன்னவன், பகைவர்மேல் படையெடுத்து, வெற்றி பெற்றுக் கருவூர் என்னும் வளநகரில் வந்து தங்குகின் றான். அவன் கருதி வந்த வெற்றிக்குத் தனிப்பெருந் துணை யாக விளங்குகின்றது கொடியதொரு யானையேயாம். அஃ தும் அவனது செங்கோல் யானையாகச் சிறந்து விளங்குகின் றது; மன்னவன் வழிபடும் யானையாக மாட்சி பெறுகின்றது.

மங்கல விழவு:—உலகத்தின் ஆற்றலே உலகத்தின் வடிவம். அஃதே இயற்கை யன்னையின் திருவிளையாடல். இவ்வாறு உலகத்தை இயக்கிவைக்கும் இயற்கை யாற்றலைத் தனிப்பெருந் தாயாக ஒன்பதிரவும் வழிபடுவது நம்மூர் வழக்கம். ஆற்றல் வேண்டும் அரசர்க்கு அஃதே பெரியதொரு திருவிழா. அப்போது ஊரெலாம் அழகொடு பொலியும். யானையும் குதிரையும் திருக்கோலம் பொலிய ஊர்வலம் வருவதும் வழக்கம். அதனைப் பழைய எருமையூர் எனும் மைசூரில் இன்றும் காணலாம். இத் திருவிழாவின் போது, ஒன்பதாம் நாளன்று, நிறைவிழாக் கொண்டாடுவர் மக்கள்.

துறை நீராடிப் பொங்கிய களிப்பு:—சிவகாமியாண்டார் ஒரு தெரு வழியே போகின்றனர். செல்வமும் சீருமாகப் பாராட்டப்பெறும் அவ்வியானை, இன்றைய நாள், நலம் பெருகும் விழவுக்கோலம் பூண்டு, ஆன்பொருநையாற்றில் நீராடி வருகிறது. களித்துத் திரியும் கருங்களிறு, நீராடிய செம்மாப்பால், களிப்பு மிகுந்து கடாம்பொழிந்து, கடுகி வருகிறதென்றால், அதன் மிடுக்கை என் என்பது!

இரியல் போதல்:—கருமலை ஒன்று ஓடோடியும் வருவது போல விரைந்து வரும் அவ்வியானையைக் கண்டோரும், அதன் நடையொலியைக் கேட்டோரும், திண்ணென்று திடுக்கிட்டு மன நடுங்கி வயிறு குலைந்து அஞ்சுகின்றனர். ஆங்காங்குத் தெருவில் நின்றவர்கள், யானை வருவதைக் கண்டும் கேட்டும், கால் கொண்டு சென்ற இடத்திற்குக் கடுகியோடுகின்றனர். யானைக்கு முன்பாக, அதனை அடக்கி யாண்டு ஓட்டிவரும் குத்துக் கோலாளர், வழியில் ஒருவரும் நில்லாதவாறு அகற்றிக் கொண்டே, குத்துக்கோலைத் தூக்கிக்கொண்டு

ஓடோடியும் வருகின்றனர். தடுப்பார் ஒருவரும் இன்றிச் சென்ற விடத்தெல்லாம் தான் நினைத்ததையே செய்து, வென்றியே பெற்ற வரும் யானையை, அடக்கியாண்டு ஓட்ட வேண்டியன்றோ, மாவெட்டிகள் அதன்மேல் உள்ளார்கள். ஆனால் நிகழ்கின்றதென்ன? அம் மாவெட்டிகள் வழியே, தான் செல்லாது, தன் வழியே அவர்களைக்கொண்டு செல்கிறது, அவ்வியானை; சிவகாமியாண்டார் செல்லும் தெருவிற்குள் புகுகிறது.

சிந்துபூந்தெரு:—முதுமைக்கோர் ஊன்றுகோலாய், அவ்வன்பரால் தாங்கப்பெற்ற தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்த தடியிலே, பூ நிறைந்த பூங்குடலையைத் தொங்கவிட்டுக் கொண்டு, சிவகாமி யாண்டார் முன்னே செல்கிறார். எவரும் ஓடி யொளியுமாறு விரைந்துவரும் அவ்வியானை, இவரது பூங்கூடைமேல் நாட்டமாய், இவரைப் பின்பற்றி யோடி வந்து, அக்கூடையைச் சடுக்கெனப்பிடித்து, பிடித்த நிலையும் பறித்த நிலையும் ஒன்றுமாறு, வெடுக்கெனப் பிடுங்கியபோதே, கீழே மலர்களைச் சிந்துகிறது. காண்கின்றார்கள், யானையின் மீதேறிய மாவெட்டிகள்; மேலொன்றும், தீங்கு நேராதபடி, அவ்வியானையை அப்புறத்தே ஓட்டிக்கொண்டுபோகின்றனர். அஃதும் எளிதில் ஆவதோ? தம்மையும் சுழற்றி யடிக்கும் சூறாவளியைத் தம் வழியே திருப்பிக் கொண்டு செல்வது போல, இக்களிற்றினை உடன்கொண்டு விரைந்தகலச் செல்கின்றனர் அம்மாவெட்டிகள். அருமையினும் அருமையன்றோ அது.

## ரு. முதற்காட்சி (முடிவு)— அன்பு வெள்ளம்

தரையடித் தெழுதல்:-இமைப்போதில் நிகழ்ந்த இதனைப் பார்க்கின்றார் சிவகாமியாண்டார். பூமலர்போனால், புனித ஒப்பனையைக் காண்பதுஎங்ஙனம்! அதனை எண்ணிப் பதை பதைக்கின்றார் அவ்வன்பர். மனம் கொந்தளித்துப் பொங்கு கிறது; பொங்கிவழிகிறது.அஃதே வெள்ளமாய் ஓடுவதுபோல ஓடுகிறார் முதுமை மிக்க சிவகாமியாண்டார்; களிப்பொடுசெல் லும் களிற்றின் பின்னே, தடிகொண் டடிக்கவேண்டி ஓடு கிறார். அத்தகைய களிற்றை இத்தகைய கிழவனாரோ பிடிக்க முடியும்? அருகே அணையவொட்டாதபடி, அவ்வியானை அகன்று போகின்றது. உலக மயக்கென்பதே இன்றி, ஒன் றனையும் வேண்டாது, அன்பு வேண்டி அன்பு பாராட்டும் திருத்தொண்டரது அன்பே அன்பு. ஆனால் மூப்பில் மூழ் கிய இவர், களிப்பில் மூழ்கிய களிற்றைப் பின்தொடர இய லுமோ? இயலவில்லை. ஓடுகின்ற ஓட்டத்தில் இவர் கால் தவறி விழுகின்றார்; தரையடித் தெழுகின்றார். இவரது துயரத்தைச் சொல்ல முடியுமோ!

சிவதா! சிவதா!:— தம்மாலாவதொன்றின்மையின், தம் தலைவனிடம் முறையிடுகின்றார் அத்தொண்டர். பூங் குடலையை, இவர் வாங்க முடியாமற் போகவே, பொன் னருளே வந்து வாங்கித் தருதல் வேண்டும் என்றெண்ணு கின்றார். அஃதே அவருடைய உறுதிப்பாடு. சிவநெறி நின்று, சிவப்பேச்சே பேசிச் சிவச் செயலேசெய்து, சிவனையே எண்ணுவார், வாழும்போதும் வாடும்போதும் 'சிவனே' என்று தம்மையுமறியாது சொல்லிச் செல்வர். "நன்மையை வளர்ப்பவனே" என்று பொருள்படும் 'சிவதா' என்ற திரு

மொழியே அவர் வாயினின்றும் மலர்ந்தெழுகிறது. "சிவனே பூங்குடலையை நிறைத்துத்தா" என்றும் அஃது இதுபோது பொருள்படுதல் காண்க. இறைவனை வேண்டி இவ்வாறு உள்ளமுருகிக் கதறுகின்றார் இப்பெரியார்.

"களியானை யின்னூர் உரியாய் சிவதா!
எளியார் வலியாம் இறைவா சிவதா!
அளியார் அடியார் அறிவே சிவதா!
தெளிவார் அமுதே சிவதா! சிவதா!" 16.

"இறைவனே! இதுபோது என்னுடைய பூங்குடலையைப் பறித்துக்கொண்ட இவ்வானையைப்போல, முன்னொரு நாள், உலகிற்குத் தீங்கு புரிந்து களித்துத் திரிந்தது ஒரு யானை; உன்னையே எதிர்த்துக்கடவுளறிவாம் அன்பறிவிலாது தமக்கெனவே வாழ்ந்த தகுதியிலாரின் (தாருக வனத்தார்) செருக்கிற்கே ஓர் அடையாளமான அவ்யானையைக் கொன்றுரித்து, அதன் உரியினை ஓர் அருள் அடையாளமாகக்கொண்டவனன்றோ நீ. அவ்வானைத் தீங்கை ஒழித்த நீ இவ்வானைத் தீங்கினையு மொழித்துப் பூங்குடலையை நிறைத்துத் தந்தருள்க. எளியாருக்குத் தோன்றாத் துணையாகிய நீ யில்லையாயின், எளியாரை வலியார் விழுங்காரோ. யானும் எளியேன். வலிய யானையினும் வலியனாய் வந்து பூங்குடலையை நிறைத்துத் தந்தருள்க. அன்பராம் அடியார் தாம் ஒன்றும் வேண்டார். அவர்க்கு வேண்டுவனவற்றை அறிந்தருளி, அவரது அறிவாய் நின்று அவர்களை இயக்கிவைக்கும் நீ, எனக்குள்ளும் அறிவாய் விளங்குதலின், யான்வேண்டுவதனை நீ அறிவாய். யான் இது வேண்டும், அது வேண்டும் என்றுன்னைக்கேட்கவும் வேண்டுமோ ? பூங்குடலையை நிறைத்துத் தந்தருள்க. உனது அன்பு வடிவத்தைத் தெளிவாகக்

கண்டு உணர்வார், தமக்கொரு துன்பமும் வாராவகை யுண்ணும் சாகாமருந்தாய்த் தனி நின்று தித்திப்போனே! எனது துயரையும் களைந்தருளிப் பூங்குடலையை நிறைத்துத் தந்தருள்க. அழகொப்பனையாம் சாகா மருந்துண்டு யானும் இன்ப முறுவேன்.

"ஆறும் மதியும் அணியும் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந் துவதே
வே(று)உள் நினைவார் புரம்வெந்(து) அவியச்
சீறும் சிலையாய் சிவதா! சிவதா!" 17.

"கடவுட் பிணையலாம் சிக்கற் றலையிடையே, தெளிந்தெழுந்து விளங்கும் பேரருட் பெருக்காம் வான் யாறும், பேரறிவின்கொழுந்தாம் வான்பிறையும், இயைந்து திகழ்வதே இன்ப நிலையாகும். அதன் மேலும் சென்று நின்று, அழகாய் ஒளிரும் இவ்வன்பு மலரை, ஏதம் கெட்ட இவ்வானையோ, கீழே மிதிபடத் தரையிற் சிந்துவது? ஐயோ! இறைவனே! இன்பமலரா லாகும் இயற்கையின் அழகொப்பனைக்கு எதிராக நிற்பார், அவ்வியற்கை யழகு வழியே சென்று எண்ணாது, அதற்கு மறுதலையாய்ப் பிறர் துன்பத்தை எண்ணி நிற்பர்; அவ்வாறு எண்ணும்போது தம் துன்பத்தையே தம்மையு மறியாதெண்ணுவர். இவ்வுலகை அழிக்கப்புகுந்த அத்தகையாரது உடலாமாம் ஊர்கள், நாளும் நெருப்பிடை நின்று வெந்தவிய வேண்டிச் சீறி யெழுந்து வில்லெடுத்தவனே! அதுபொழுது அருளியதுபோல, இதுபொழுது அருளாயோ? இவ்வாறு எனது அன்பு மலர் அழிவதும், அழகு ஒப்பனையை நான் காணாது ஒழிவதும், முறையேயோ? பூங்குடலையை நிறைத்துத் தந்தருள்க.

"தஞ்சே சரணம் புகுதுந் தமியோர்
நெஞ்சேய் துயரம் கெடநேர் தொடரும்
மஞ்சே யெனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ்சே வடியாய் சிவதா! சிவதா!" 18.

"எளிதே அடைக்கலம் என்று நின்னடியிற் புகுந்த தன்னந்தனியனும் சிறுவன்மீது, (மார்க்கண்டன்) கருமுகில் என வீழ்ந்த கூற்றுவனுயிர் குலையவும், அச்சிறுவனது நெஞ்சு நிறைந்த துயரம் ஒழியவும், சிறிதளவே நீண்ட செஞ்சே வடிவாய்! குழவியின் குழைந்த மனமே வேண்டுவது. அந்நிலையே அருள்நிலை. அந்நிலையிலன்றோ கூற்றம் குதித்தலும் கைகூடும்? சாவா நிலையானவனே! நினது குழவியாம் எனது துயர்மட்டும் கெடாதிருப்பதோ? பூங்குடலையை நிறைத்துத் தந்தருள்க.

"நெடியோன் அறியா நெறியார் அறியும்
படியால் அடிமைப் பணிசெய்(து) ஒழுகும்
அடியார் களில்யான் ஆரா அணைவாய்
முடியா முதலாய் எனவே மொழிய." 19.

"ஊனக் கண்கொண்டு உலகனைத்தையும் அளந்தறிந்தோர் அறிந்த உலகவழி ஒன்று. [நெடியோன்] அப்புறவறிவால் அறியலாகாத அன்புலக வழி வேறு. அந்நெறியே செல்கின்றனர் நின்னடியர். அன்னோர், இப்புறவறிவின்றியும் தம் மன்பறிந்தபடி, தொழில் புரியும்போது அவை எல்லாம், திருப்பணியாகின்றன. அத்தகைய அடியார்களில், யான்யார், எனக்கருதி இங்கு என்னைக் காத்தருள வரப்போகிறாய். முடியா முதலானவன் நீயேயாதலின் உன்னிடையே சிக்கிய யான் உன்னின்நின்றும் தப்பும் வழியேது? வேறொரு துணையினி மறுமைக்கும் காணேன். ஆதலின் நீயே வந்தருளிப்

பூங்குடலையைத் தந்தருள்க'' என்று கதறுகின்றார் அம்மெய் யன்பர். அந்தணர்கள், வடமொழி வல்லவர்களாதலின், வட சொற்கள் பயின்றுவரப் பேசுவர். அதற்கிணங்கச் சிவகாமி யார் "சிவதா'' எனக் கதறுதல் காண்க. பார்ப்பனரைப் பார்ப் பனர்போலவே பேசவைக்கும் கூத்து நூனுட்பத்தைச் சேக் கிழார் நன்கறிவர். இம்முறை யீட்டில் அவலக் கவலைக் கையாறு என்ற நிலைகள் முறையே வளர்ந்துவர, முடிவில் "யான் யார்'' எனச் செயலற்று அன்பர் நிற்பதும் காண்க.

அடியும் முடியும்:—இம்முறையீட்டின் வழியாகச் சிவ காமியாண்டார், சிவபெருமானை எங்ஙனம் வழிபட்டார், என்ற உண்மையை, அவர் வாய் வைத்தே, சேக்கிழார் விளக்குகின்றார். என்றும் முடியாத பொருள், முடியும் எவற்றிற்கும் தானே முடிவாய் விளங்கும் பொருள், எப் பொருளும் முதல் தோன்றுவதற்கு முன்னேயும் நின்று, அவற்றிற்குத் தானே முதலாகியும் ஒளிர்கின்ற பொருள், இத்தகைய பொருள், எங்கும் பரந்து, என்றும், எல்லா மாய் நிற்றலின், இதனிடையே நாமும் சிக்க, நம்மிடை இஃ தும் சிக்கிக் கொண்டுள்ளது. இவ்வியைபு பெற்ற இன்பப் பொருளையே வழிபடுகிறார் சிவகாமியாண்டார். அவர் வழி படும் வடிவம் யாது? அடிமுடியைப் புனைந்துரைத்து அவ்வடி வத்தின் பெருமையைச் சேக்கிழார் விளக்குகின்றார். உணர்ந் தறியலாகாதபடி, உலக முழுதுமாய் நிற்கும் கடவுட் பிணைய லொன்றுண்டு. உணர்வு கொண்டு நோக்கும்போது என்ன காண்கிறோம்? அப்பிணையல் மறைய, அதிலிருந்தும் தெளிந் தெழுந்து ஒரு வெள்ளம் புரள்கின்றது. அஃதே அருள் வெள்ளப் பேராறு. அங்கொரு சுடர்க்கொழுந்தும் மின் னிப் பொலிகின்றது. அஃதே அறிவாம் பிறையாகும். ஈதே

திருமுடி. இறைவனது திருவடியோ மறலியைக் கடந்து மகிழ்ச்சியே வடிவாம் திருவடி; அங்கிலேயிலும் செங்கிலே பிறழா அறவாழியான திருவடி; சிவப்பு மாறுதே அழியாது அழகாந் திருவடி. இன்பமும் அறமும் அறிவும் அழகு மாம் திருவடியும், அருளோடு அழகும் அறிவுமாம் திரு முடியும், கொண்டு, உலகூடே ஊற்றெடுத்து வெள்ளமாய்ப் புரளும் அழகினையன்றே, சிவகாமி யாண்டார் வழிபடு கின்றார்.

அழகு வழிபாடு:—மேலும் அழகாய், கீழும் அழகாய் நிறைதலின் அவ்வடிவே அழகு என்க. இப்பெரும்பொருளே விழுங்கித் தன்னுள்ளே அமையக் காண்கிறார் ஆதலின், இவருடைய அன்பு, இறைவனையும் உள்ளடக்கி, நிற் கின்றது. இவனை அடையும் நெறி அஃதேயாகும். உல கையும் கடந்து நின்றவனை, உலக அறிவால் உலகை யளந்த றிந்தவர்கள், எவ்வாறு அறிவர்? அனைத்துலகையும் ஆளும் அரசனை, அவனது பால்மணமாறுத பச்சிளங் குழவி காலால் எட்டி உதைக்கின்றது. அது பேரின்பமென அவ னும் அகமகழ்கின்றுன். உள்ளத்தோடுள்ளம் ஒன்றுகின் றது. ஒற்றுமை நிலேயே உவகைக் கடலாகும். இஃது அன் பினல் இயைந்ததோர் இயைபு. அவ்வன்பு நெறியிலே நின் ருல், குழவி செய்வதனைத்தும் இன்பமாதல்போல, நாம் அறிந்தபடி செய்வன எல்லாம் திருப்பணியாய், அக்கடவு ளுக்கேற்றன ஆகின்றன. நான் என்றும், நீ என்றும், பேசும் பேச்சு, பொருளற்று நின்ற ஒற்றுமை நிலேயில், நானும் நீயும் அவனும் ஒரு பொருளேயே யன்றி வெவ்வேறு பொருள் களைத் தனித்தனிச் சுட்டுவதில்லே. அவ்வொற்றுமை நிலேயில் 'நானுகந்தது' என்றால், 'நீயுகந்தது' என்றும் 'அவனுகந்தது'

என்றும் பொருள்படுமன்றோ! ஆதலின் அந்நிலை நின்ற அடியார் செய்வன எல்லாம் அவனுகந்தனவே யாம்.

அன்பு மலர்:—மலர்த்தொண்டெனச் சிவகாமியாண்டார் செய்கின்றதுதான் யாது? உயர்ந்ததொரு கொள்கையினையே இம்மலர்த் தொண்டு சுட்டுகின்றது. உலகத்தையும் கடந்து நிற்கின்ற அருளையும் (கங்கை) அறிவையும் (சந்திரன்) அழகாக இயையவைத்து, அவற்றிற்கும் மேற்சென்று ஒளிர்வது, அன்பு மலரே யாகும். இவ்வுயரிய அன்பாகவே, தமது மலர்களைக் கருதுகின்றாரே யன்றி, வெறும் பூக்களாக எண்ணுகின்றிலர் அத்தொண்டர்.

"பூமேல் அயனறியா மோலிப் புறத்ததே
நாமே புகழ்ந்ததனை நாட்டுவோம்—பாமேவும்
ஏத்துகந்தான் தில்லை இடத்துகந்தான் அம்பலத்தே
கூத்துகந்தான் கொற்றக் குடை."

என்ற இடத்தே, பட்டினத்தடிகள், இறைவனது அறவாழி வடிவமாம் வெண்கொற்றக் குடை, அவனது முடியைக் கடந்து நின்றதாதலின், அறநிலைக் கடங்கியே ஆண்டவன் தன்னருளால் அமைந்துளான் என்று புனைந்துரைக்கின்றார். சிவகாமியாண்டாரோ, அத்திருமுடியைக் கடந்தும் ஒளிர்வது அன்பு மலரே எனக் கொண்டு வழிபடுகிறார். வீடும் வேண்டா விறலினர், வீட்டையும் கடந்தன்றோ நிற்கின்றனர்.

இன்ப அன்பே இறைவனழகு:—சிவகாமியாண்டார் அறத்தினையோ, சேவடியின் செம்மை நிலையாகக்கண்டு வழிபடுகிறார். அடியார்க் கறவழியில் நின்று, இன்பமூட்ட வேண்டி, உலகிடை இயங்கிக் கூத்தாடும் திருவடியினது நிலையை, அறமும் அழகும் இன்பமுமாய் இயைந்த அடிநிலை

யாகவும், அனைத்தையும் கடந்த திருமுடி நிலையை, உலகிடை யே கடவுட்பிணையலைக் கண்டறிந்தோருக்கு அப்பிணையலி லிருந்தே தெளிந்தெழுந்து தோன்றும் அருளும் அறிவும் இயைந்ததோர் முடிநிலையாகவும், அமைத்துக்கொண்டு அமர் ந்து விளங்கும் அவ்வுயர் பொருள், அடியாரது அன்பொன் றற்கே உள்ளடங்கி நின்று, அவர்களது அன்பையே அழ கொப்பனையாகக் கொண்டு, ஒளிர்கின்றது. இவ்வுண்மை யினை இம்முறையீடு நன்கு விளக்குவது காண்க.

அன்பின் எதிர் நிலை:—வேறெண்ணினவார் அழிவதனை யும், மறலிமாள்வதனையும், களிற்றுரி போர்த்தலையும், எண்ணி எண்ணி, இறைவனது இயற்கை நெறிக்கு எதிர் செல்வார் படும்பாட்டைச் சிவகாமியாண்டார் நினைப்பூட்டுகின்றார். இன்ப நெறிக்கெதிரே துன்பநெறியே தோன்றும். அழியா மைக்கெதிரே அழிவே காண்போம்.

தோன்றாத் துணை:—இவ்வின்ப அன்பு நெறியில் சிவ காமியாண்டார் நின்ற நிலை யாது? எல்லாம் இறைவனே என்ற உண்மையை உணர்ந்து, எல்லாம் அவன் செயல் என இயற்கையோடியைந்து நிற்கின்றார், இவ்வன்பர். இவரு டைய அறிவுக்கறிவாய் இருந்து அனைத்தையும் இயக்குகின் றான் இறைவன், என உறுதி கூறுகின்றார் சிவகாமியாண் டார் இறைவன், இவருக்கு, மூவா மருந்தென இனிக்கின்று னும். உண்ட நிலையில் உறக்கமும் உண்டு. இவனது இன்ப வுணவுண்ட போதோர் தெளிவே உண்டெனத் தாம் துய்த் துணர்ந்ததைச் சுட்டிக் காட்டுகின்றார், சிவகாமியாண்டார்; முதுமையிலும், குளிர் எனப்பாராது, தண்ணீரில் மூழ்கி இரவில், தடியூன்றி நடந்து, தொண்டு புரிதற்கு, எங்கிருந்து வன்மை பெற்றார், என்பதனையும் விளக்குகின்றார். அன்பு

நெறியின் வன்மையே ஈது. எளியார்க்கு வல்லவன் அவனே யன்றோ? அவன் வலிவே இவர் வலிவாகும்.

வாழ்ந்து நின்றாரோ:—இத்தகைய முறையீட்டை இறைவன் கேளாமற் போவானோ? இறைவன் இதனைக் கேட்டுப் பூங்குடலையை நிரப்புவதனைப் பின்னர்க் காண்போம். இவ்வன்பர் இவ்வாறு வாடுதலும் தகுமோ? இவை யனைத்தும், கண் மயக்கே என்று, திருவருளே பின்னர்க் கூறி, எதிர் நிற்கிறது. ஆனால், இதுபோது என்ன தோன்றுகிறது. மலரைப் பறிகொடுத்தார்; மலரே இவருடைய அன்பு; ஆதலின் அன்பைப் பறிகொடுத்தார்; அன்போ இவருயிர்; ஆதலின் உயிரைப் பறிகொடுத்தார்; எனவே செத்தாற்போல நிற்கின்றார் சிவகாமியாண்டார். பூங்கூடை நிறைந்திராமற் போனால், இவர், இறந்துபட்டே நிற்பர் என்பதே சேக்கிழாரது புனைந்துரை. பின்னே, இறைவனது திருவருளால், பூங்கூடை நிறைந்தபோது, சிவகாமியாண்டாரைப் புனைந்துரைக்கும் சேக்கிழார், இவரை "வாழ்ந்து நின்றார்" என்று புகழ்தல் காண்க. நிறையாக்கால், 'வாழாதிறந்திருப்பர்' என்பது போதரவில்லையா? அன்பின் ஆழத்தை என் என்பது? அன்போடியைந்த நிலையில் அன்பழிய அன்பரும் அழிவர். ஈதே அகப்பொருள் உண்மை. எனவே, அழகொப்பனையையும் அன்பையுமே இழந்தார் என இவர் நின்றாரேயன்றி, மலரை இழந்தார் என நிற்கவில்லை. இவர் மலரிலும் அன்பே காண்பார்; அதுபற்றியன்றோ உயிரிழந்தாரைப்போல நிற்கின்றார். சிவகாமியாண்டாரது அன்பு வெள்ளத்தின் அழகிய ஓவியம் ஈது.

## ௬. இரண்டாம் காட்சி—எரிமலை

கோலமழு எடுத்து வந்தார்:—இனி, இரண்டாங் காட்சியில் எறிபத்தர் என்னும் எரிமலையின் ஓவியத்தைக் காண்கிறோம்.

"என்றவர் உரைத்த மாற்றம் எறிபத்தர் எதிரே வாரா
நின்றவர் கேளா மூளும் நெருப்புயிர்த்(து), அழன்று பொங்கி
மன்றவர் அடியார்க்(கு) என்றும் வழிப்பகை களிறே யன்றோ
கொன்(று) அது வீழ்ப்பன் என்று கொலைமழு எடுத்து வந்தார்." 20.

எறிபத்தரது அன்பு நிலையை முன்னரே சேக்கிழார் முன்னுரையாகக் கூறுகின்றமை கண்டோம். சிவகாமியாண்டாரது எதிரே அத்தகைய எறிபத்தர் வருகின்றார். சிவகாமியாண்டாரது நிலைமையை யார் கண்டாலும் மனம் குழைவர். எறிபத்தர் கண்டால் என் ஆவர்? எரியாவர். சிவகாமியாண்டாரது முறையீடு காதில் விழுகின்றது. எறிபத்தர் அழல் வடிவமாகிறார்; நெருப்பு மேலும் மேலும் மூள, அந்நெருப்பையே மூச்சு விட்டு நிற்கின்றார். மேன் மேலும் மூளும் தீ பொங்குகிறது. "இன்பக் கூத்தாடும் ஆண்டவனையே அழிக்க அன்றொரு யானைவந்தது. அன்பு வழி நின்ற அடியாரை அழிக்க இன்றொரு யானை வந்தது. இவ்வாறு யானையன்றோ ஆண்டான் நாளிலிருந்து சிவனடியார்க்கு வழி வழிப் பகையாகி வருகின்றது. ஆண்டவன் அன்று கொன்றதுபோல, அடியேன் இன்று கொன்று வீழ்த்துவேன்" எனத் துணிகிறார் எறிபத்தர். இறைவனையே எண்ணி வாழ்வார்க்கு, அறச்செயலும் அவன் செயலையே நினைப்பூட்டும்; மறச்செயலும் அவன் செயலையே நினைப்பூட்டும். துணிந்ததும், கொலைமழுவானது தோன்றுகிறது. கொல்லாது விடாத மழுவினை ஏந்தி வருகிறார்.

"வந்தவர் அழைத்த தொண்டர் தமைக்கண்டு வணங்கி நும்மை
இந்தவல் இடும்பை செய்த யானை எங்(கு) உற்ற(து)," என்ன
எந்தையார் சாத்தும் பூவை என்கையிற் பறித்து மண்மேல்
சிந்திமுன் பிழைத்துப் போகா நின்ற(து) இத்தெருவே" என்றார்.
21.

'இத்தெருவே' :—முறையீட்டைக் கேட்ட எறிபத்தர், முறையிடும் சிவகாமி யாண்டாரை நேரிற் காண்கிறார். அன்பு குழைந்து அவரை வணங்குகிறார். தீ வடிவமும் இவ்வாறு அடியார் எதிரே நீர் வடிவமாகிறது. "இவ்வாறு பெருந்துன்பம் செய்த யானை எங்குப் போய்விட்டது" என்று எறிபத்தர் வினவுகிறார். சிவகாமியாண்டாரும், தமது வருத்தத்தை வெளியிடுவாராய் "எந்தையார்க்குச் சாத்தும் பூவை என் கையினின்றும் பறித்து மண்மேற் சிந்திப் பிழைத்துப் போகிறது, இத்தெருவே" எனச் சுட்டிக் காட்டுகின்றார். "இத்தெருவே" என்று பாடும் சேக்கிழாரது கூத்து நுனயம் பாராட்டற்பாலது. சிவகாமி யாண்டார், இங்கும் இறைவனுக்குச் செய்யும் ஒப்பனையையே எண்ணி, அதனை இழந்ததனையே சுட்டுதல் காண்க.

"பிழைப்பதேது" :—

"இங்(கு) அது பிழைப்பது எங்கே இனி" என எரிவாய் சிந்தும்
அங்கையின் மழுவுந் தாமும் அனலும்வெங் காலும் என்னப்
பொங்கிய விசையிற் சென்று பொருகரி தொடர்ந்து பற்றும்
செங்கண்வா ளரியிற் கூடிக் கிடைத்தனர் சீற்றம் மிக்கார்." 22.

"கண்டவர் 'இதுமுன்(பு) அண்ணல் உரித்தஅக் களிறே போலும்
அண்டரும் மண்ணு ளோரும் தடுக்கினும் அடர்த்துச் சிந்தத்
துண்டித்துக் கொல்வேன்' என்று சுடர்மழு வலத்தில் வீசிக்
கொண்டெழுந் தார்த்துச் சென்று காலினாற் குலுங்கப் பாய்ந்தார்."
23.

'பிழைத்துப் போகிறது' என்று மனம் வருந்திக் கூறு கின்றமை கேட்ட எறிபத்தர் "இனி இவ்வுலகில் இது பிழைப்பதேது" என உறுதிகூறி மேற்செல்கிறார்.

அறிவு கலங்கினும் அன்பு கலங்கார்:—தீயாய் நின்றவரது அங்கையிலே எரியைக் கக்கும் மழுவொன்று விளங்குகிறது. தீயோடு கடுங்காற்றும் ஒருங்கியைந்தாற்போல முந்திச் செல்கின்றார் எறிபத்தர்; விரைவு என்ற ஒன்றே பொங்குவதுபோல, விரைந்து சென்று, அக் களிற்றைக் கண்டு, பின் தொடர்கின்றார்; தன்னொடு பொருது தன்னைத் தாக்கும் யானையைக் கண்டு, சினத்தால் கண்சிவக்கும் மடங்கல், அவ் வியானைமேல் பாய்ந்து, பின்தொடர்ந்தோடுதல் போலச் சீற்றத்தோடும் பெருமித நடையோடும் சென்று அவ்வானையைக் கிட்டுகின்றார்; காண்கின்றார் யானையை. இவர் அறிவையும் வியப்புறச் செய்கின்றது அவ்வானை. "முன்னர் ஆண்டவன் உரித்த அவ்வானையோ ஈது" என அவர் எண்ணமிடுகிறார். அவருக்கும் அத்தகைய தோற்றமுண்டாயதென ஒரு நுட்பம் காட்டுகின்றார் சேக்கிழார். அறிவு துணுக்கிட்டதேனும் அன்பு துணுக்கிடவில்லை. "ஈது அந்தக் களிறேயாயினும், இதனை அடர்த்துச் சிறித் துணித்துக் கொல்வேன். விண்ணவர் வந்து தடுக்கினும் விடேன். மண்ணவர் வந்து தடுக்கினும் விடேன். இருவரும் ஒருங்கியைந்து வந்து தடுக்கினும் விடேன்." எனத் துணிவு கொள்கின்றார் எறிபத்தர். "அரசன் யானையாயினும் அதுபற்றிப் பின் வாங்கேன்" என்று சொல்லியபடி எங்க.

காலினிற் குலுங்கப் பாய்ந்தார்:—துணிந்ததும் தமது சுடர்வீசும் மழுவினை வலமிடமாகச் சுற்றிக்கொண்டே குதித்தெழுந்து ஆர்க்கின்றார் எறிபத்தர்; தம்முயிரைப்

பொருட்படுத்தாது சிவகாமியாண்டார்க்கு உதவுவதையே பொருள் என எண்ணிச் செல்கின்றார்; சென்று யானை குலுங் கக் காலிற் பாய்கின்றார். இவரது தறுகண்மையை என் என் பது!

தாயின் தலை யன்பு:—

"பாய்தலும் விசைகொண் டுய்க்கும் பாகரைக் கொண்டு சீறிக்
காய்தழ லுமிழ்கண் வேழந் திரிந்துமேற் கதுவ, "அச்சம்
தாய்தலை யன்பின் முன்பு நிற்குமே!"— தகைந்து பாய்ந்து
தோய்தனித் தடக்கைவீழ மழுவினால் துணித்தார் தொண்டர்." 24.

பாய்ந்ததும் மாவெட்டிகள் இப்போரினைத் தடுப் பதற்காக எண்ணி, அப்புறத்தே அவ்வானையைச் செலுத்திக் கொண்டுபோக முயல்கின்றனர். ஆனால் அவ் வானையோ, அவர்வழிச் செல்லாது, அவர்களையும் தன் வழியே உடன்கொண்டு சீறுகிறது. யானையின் கண்கள், 'கனகன' என்றெறியும் நெருப்பை யுமிழ்கின்றன. எறி பத்தர், பின்புறமாகப் பாய்ந்ததும், அவ்வானை அவருக்கு நேரே திரும்பி, அவரைப் பிடிக்க முந்துகிறது. எறிபத்தர் இதற்கு அஞ்சுகின்றாரோ? தாயினது தலையளிக்கு எதிரே அச்சமும் முன்பு நிற்குமோ? கன்றினைக் கௌவிச் செல் லும் கடும்புலியின் மேலும் சென்று கற்று பாயுமன்றோ? வீடு பற்றி எரிகிறது. குழவி உள்ளே தூங்குகிறது. குழந் தையைக் கொண்டுவர வீட்டிற்குள் பாய்கின்றாள் தாய். அவள் எரிக்கு அஞ்சி நிற்பதில்லை. தம்மை மறந்த அன்பு நிலையில், தமக்கு வரும் கேட்டையும் அன்றேமறப்பர் அன் பர். தோன்றாத நின்ற வொன்றற்கு அஞ்சுவதேது? அன்பிற் சிறந்த தலையன்போடு உள்ளமுருகும் தாயின் நிலை, இதனி

னும் அழகிது. தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர், தமக் கென அஞ்சுவதேது?

தொண்டர் துணித்தார்:—யானை, எட்டிப் பிடிக்க வந்த போது, சிறிது அப்புறந் தள்ளி நின்று, உடனே யானைமேற் பாய்கிறார் எறிபத்தர்; நிலம் வரை தொங்கிப் பனைபோல் பரு த்த பெருந் தும்பிக்கையை, மழுவினால் எறிகின்றார். அத்தும் பிக்கையும் கீழே வீழ்கிறது. "பகையோ மறமோ கருதாது தொண்டே கருதி இங்ஙனம் செய்கிறார், என்பது இந்நிலை யில் தோன்றுவதனைக் காண்மின்" எனக் காட்டுகின்றார் சேக்கிழார்; "தொண்டர் துணித்தார்" எனப் புகழ்கின்றார்.

ஐவரைக் கொன்று நின்றார்:—

"கையினைத் துணித்த போது கடலெனக் கதறி வீழ்ந்து
மைவரை யனைய வேழம் புரண்டிட மருங்கு வந்த
வெய்யகோற் பாகர் மூவர் மிசைகொண்டார் இருவர் ஆக
ஐவரைக் கொன்று நின்றார் அருவரை யனைய தோளார்." 25.

ஒரே வெட்டில் ஒழிகின்றது அவ்வானை; தும்பிக்கை வெட்டுண்டபோது அந்நோய் பொறுக்கமாட்டாது கட லெனக் கதறி வீழ்ந்து கருமலைபோலப் புரள்கிறது. எதிரே சென்ற குத்துக் கோலாளர் மூவரும் மேலேறி வந்தமாவெட்டிகள் இருவரும் ஆக ஐவரையும், மலையனைய யானையினெதிரே, மலையனைய தோள்வலியுடைய எறிபத்தர் கொல்கின்றார். இப்போரினை இவ்வளவு சுருக்கமாக முடிக் கின்றார் சேக்கிழார். இவ்வளவும் இமைப்போதில் முடிகின் றது. இதைக்கண்ட பிறர், ஓடிவிடுகின்றனர். எறிபத்தரது சீற் றமோ தணிந்தபாடில்லை. அவர், ஒருகையானை யருகே இரு

கையானைபோல்ச் சுடர்விடும் மழுவேந்தி நிற்கின்றார். இவ்வாறு, களிற்றினை வெளியேவிட்ட அரசன் வரையிலும், இவரது சீற்றம் செல்கிறது. இதனை வெளிப்படையாகச் சொல்ல மாட்டாத சேக்கிழார், குறிப்பாற் பெற வைக்கின்றார். பின்னர், எறிபத்தர் புகழ்ச்சோழன் எதிரே நின்று "அன்பனார் தமக்குத் தீங்கு நினைத்தனன்'' என்று தமக்குள் வருந்துவதாகச் சேக்கிழார் கூறுகின்றார். ஆதலின் எறிபத்தரது சீற்றம், சோழனளவும் செல்கின்றதாதலின், அவர், அவன் வருகையையும் எதிர்பார்த்து நிற்கின்றார்.

எறிபத்தரின் முன்னிலை:—அஞ்சாது உதவும் எறிபத்தரது அன்பு நிலையை இவ்வாறு புனைந்துரைக்கின்றார் சேக்கிழார்; இவர் எதிர்த்துத் தாக்கிய யானையின் பெருமையையும் உயர்த்திக் கூறுகின்றார். அரசன் காவற்குட்பட்ட அவ்வானை, கருமலையொன்று சூறுவளியாய்ச் சுழன்று வருவது போல வருகிறது; கடலெனக் கதறி விழுகிறது. சில மறவர்களுக்குச் சினநிலையில், மலையும் துரும்பாகத் தோன்றும். அவர்களும், மலையென் றறியாது துரும்பென்றெண்ணி மன உறுதியால் வெற்றி பெறுவர். சினத்தால் அறிவு கலங்கிய நிலையன்றோ ஈது. எறிபத்தரோ, அவ்வாறு அறியாது தாக்குகின்றவர் அல்லர். இறைவனை எதிர்த்த யானைபோலவே இவருக்கு இவ்வானை தோன்றுகிறது. அதன் பின்னும், அஞ்சாது தாக்குகின்றமையே, இவருடைய தறுகண்மையின் சிறப்பு. கடலென்றும், கருமலை யென்றும், கடுங்காற்று என்றும், கடவுள் உரித்த யானை என்றும், யானையைப் புனைந்துரைக்கின்றதுபோல், எறிபத்தரது நிலையையும், ஒப்புமைப் பொருள்களைச் சுட்டிக்காட்டிப் புனைந்துரைக்கின்றார், சேக்கிழார். "மூளு நெருப்புயிர்த்தழன்று பொங்கி, எரிவாய்

இந்தும் மழுவும் தாமும் அனலும் வெங்காலும் என்னப் பொங்கிய விசையிற் சென்று, பொருகரி தொடரும் செங் கண் வாளரியிற் கிட்டி, சுடர் மழுவலத்தில் வீசிக்கொண்டே எழுந்து, ஆர்த்துக் காலினாற் குலுங்கப் பாய்ந்தபோது, வேழந் திரிந்து மேற்கதுவத் தலைகாந்து, பாய்ந்து, மழுவினால் துணிக்கின்றார்" என்பதாக, விரைந்து பொங்கும் காற்றி னாலே மூண்டெரியும் நெருப்பு வடிவமாக நிலவும் ஒரு மடங்கல் மகனாக எறிபத்தரைப் புகழ்கின்றார் சேக்கிழார்.

## எ. மூன்றாங் காட்சி - கடற் கொத்தளிப்பு

மணிக்கடைக் காப்போர்:—

“வெட்டுண்டு பட்டு வீழ்ந்தார் ஒழியவே(று) உள்ளார் ஓடி
மட்டவிழ் தொங்கல் மன்னன் வாயில்கா வலரை நோக்கிப்
‘பட்டவர்த் தனமும் பட்டுப் பாகரும் பட்டார் என்று
முட்டநீர் கடிது புக்கு முதல்வனுக்(கு) உரையும்’ என்றார்.” 26.

“மற்றவர் மொழிந்த மாற்றம் மணிக்கடை காப்போர் கேளாக்
கொற்றவன் தன்பால் எய்திக் குரைகழல் பணிந்து போற்றிப்
‘பற்றலர் இலாதாய்! நின்பொற் பட்டமால் யானை வீழச்
செற்றனர் சிலராம் என்று செப்பினர் பாகர்’ என்றார்.” 27.

மேலே மூன்றாங் காட்சியில் புகழ்ச்சோழனாரெனும் கடற் கொந்தளிப்பின் ஓவியத்தைக் காண்கிறோம். மாவெட்டிகளில் இறந்த ஐவர்போக, மிகுதி நின்றவர்கள் ஓடோடியும் போய், மகிழ்ச்சி வடிவாம் மாலை யணிந்த மன்னனது வாயிலை அடைகின்றனர். ஆராய்ச்சிமணி கட்டி ஆளும் அரசன் அன்றோ அவன். அவனது வாயில் காப்போர்களை நோக்கி, “செங்கோல் யானையும் பட்டது; மாவெட்டிகளும் பட்டனர். இறைவனெதிரே சென்று இதனைச் சொல்லுங்கள்” என்று கூறுகின்றனர் ஓடிவந்தோர். அவ்வாயில் காப்பாளரும், விரைந்து சென்று, அரசனை அடைந்து, அவனடி வணங்கி, “வாழிய வேந்தே! பற்றலர் இலாதாய்! நின் யானை வீழச் செற்றவர் சிலராம், எனச் செப்பினர் மாவெட்டிகள்” என்றெடுத்து உரைக்கின்றனர். அரசனுடன் பேசப் புகுவார் ‘வாழிய வேந்தே’ என்று கூறித் தொடங்குவதைச் சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் நாம் காண்பதுபோல இங்கும் காவலாளர்கள் அரசனை வாழ்த்தியே பேசத் தொடங்குகின்றார்கள். சேக்கிழார், தமது

காலத்தும், அது வழக்கா யிருந்தமையைச் சுட்டுகின்றார். இது நிற்க.

உரை மாறுபாடு:—முன் வந்து கூறிய மாவெட்டிகள் "பட்டது; பட்டனர்" எனச் செயப்படு பொருள் குன்றிய வினையாகவும் செய்வினையாகவும் கூற, அதனை விரைவிற் கேட்டுவந்த வாயில் காப்பாளரோ, "கொல்லப்பட்டது; 'கொல்லப்பட்டனர்" என்று செயப்பாட்டு வினையாக உட் கொண்டு, 'கொன்றனர்' எனச் செயப்படு பொருள் குன்றா வினையாகக் கூறி, அதற்கொரு செய்வானை வேண்டி, 'சிலர்' என எழுவாயைத் தந்துரைக்கின்றனர். இவ்வுரை மாறுபாடு, விரைவுப் பொருளைக் குறிப்பது காண்க.

மட்டவிழ் தோங்கல் மன்னன் :—வளவனோ தனது தோள்வலியால், பகைவரின்றி நாட்டை யாள்கின்றான்; இன்பக்குறியாய் அத்தோளில் அழகிய மலர்மாலை அணிந்து விளங்குகிறான். கடவுளொப்பனைக்கமைந்த மலர்கள் சிந்திக் கிடக்கும் இந்நிலையில், அரசனது அழகிய மலர் மாலையைப் புனைந்துரைக்கும் சேக்கிழாரது உள்ளக் கருத்தினை உய்த் துணர்தல் வேண்டும். இவனும், இன்ப அன்பு வாழ்க்கை யில் ஈடுபட்டவனாதலின், அத்தொண்டர்க்கேற்பட்ட இடை யூற்றின் இயல்பினை அறிவான் அன்றோ?

அலங்கற் சுரும்பினம் கிளர்தல்:—

"வளவனும் கேட்ட போதின் மாறின்றி மண்காக் கின்ற
கிளர்மணித் தோள்அ லங்கற் சுரும்பினங் கிளர்ந்து பொங்க
அளவில்சீற் றத்தி னாலே 'யார்செய்தார்' என்றுங் கேளான்
இளவரி யேறு போல எழின்மணி வாயில் நீங்க." 28.

இதனைக் கேட்டதும், அரசன் நிலை, எவ்வாறு ஆகிறது? தோளிலணிந்த, இன்ப அன்பு மாலையிலேயே, ஒரு நடுக்கம்

உண்டாகின்றது. பகைக்கெனத் தினவெடுக்கும் தோள்க ளன்றோ கிளர்ந்து தோற்றுகின்றன. என் செய்கின்றான் அரசன்? அளவிலாச் சீற்றமேயாய்த் திகழ்கின்றான். சீற்ற மிக்க நிலையில், பேச்சேது? "யார் செய்தார்?" என்றும் கேளான். செங்குருதித் துவர் மிக்க சேயிளங் காளை என நின்றான் மடங்கல் ஏறுபோலப் பாய்கின்றான். எறிபத்தரும் முன்னிலையில் மடங்கலுக்கே ஒப்பாய் நின் றார். புகழ்ச்சோழன் இந்த முன்னிலையில் மடங்கலுக்கே ஒப்பாக விளங்குகின்றான். சேக்கிழார் பெருமான் இவ்வாறு தமது கொள்கையை வற்புறுத்துவது காண்க. இது நிற்க. அவ்வாறு பாய்ந்தெழுவதை, மாலையில் மொய்த்த சுரும்பி னம் திடுக்கிட்டுக் கொம்மெனப் பொங்கி எழுவதாலேயே, உணர்கின்றோம். இமைப்போதில் அவனை வாயிலின் வெளியே காண்கின்றோம்

படை எழுச்சி:—

"தந்திரத் தலைவர் தாமுந் தலைவன்றன் நிலைமை கண்டு
வந்துறச் சேனை தன்னை வல்விரைந்(து) எழமுன் சாற்ற
அந்தரத்(து) அகலம் எல்லாம் அணிதுகிற் பதாகை தூர்ப்ப
எந்திரத் தேரும் மாவும் இடையிடை களிறு மாகி." 29.

"வில்லொடு வேல்வாள் தண்டு பிண்டிபா லங்கள் மிக்க
வல்லெழு முசலம் நேமி மழுக்கழுக் கடைமுன் னான
பல்படைக் கலன்கள் பற்றிப் பைங்கழல் வரிந்த வன்கண்
எல்லையில் படைஞர் கொட்புற்(று) எழுந்தனர் எங்குமெங்கும்." 30.

"சங்கொடு தாரைகாளந் தழங்கொலி முழங்கு பேரி
வெங்குரற் பம்பை கண்டை வியன்துடி திமிலை தட்டி
பொங்(கு)ஒலிச் சின்னம்எல்லாம் பொருபடை மிடைந்த பொற்பின்
மங்குல்வான் கிளர்ச்சி நாண மருங்கெழுந் தியம்பி மல்க." 31.

"தூரியத் துவைப்பு முட்டுஞ் சுடர்ப்படை யொலியும் மாவின்
தார்மணி யிசைப்பும் வேழ முழக்கமுந் தடந்தேர்ச் சீரும்
வீரர்தஞ் செருக்கி ஞர்ப்பு மிக்கெழுந் தொன்ரும் எல்லைக்
காருடன் கடைநாட் பொங்குங் கடல்என கவித்த வன்றே." 32.

"பண்ணுறு முறுப்பு நான்கிற் புரந்தெழு சேனை எல்லாம்
மண்ணிடை யிறுகான் மேன்மேல் வந்தெழுந் ததுபோல்தோன்றத்
தண்ணணிக் கவிகை மன்னன் தானைபின் தொடரத் தானோர்
அண்ணலம் புரவி மேல்கொண் டரசமா வீதி சென்ருன்." 33.

குறிப்பறிந்துதவும் படையாளரும், அவன் நிலைமை கண்டு, படைதிரளுமாறு ஏவுகின்றனர். வார்கழல் கட்டிய படைஞர்கள், வில், வேல், வாள், தண்டு, பிண்டிபாலம், முசலம், நேமி, மழு, கழுக்கடை முதலான பல படைகளைக் கையிற்பற்றி, இடமும் வலமுமாகச் சுற்றிக் கொண் டெழுகின்றனர். இவர்களிடையே, பொறிகள் அமைந்த தேரும், குதிரையும், களிறும், நெருங்கி வருகின்றன. இப்படை ஏந்திய துகிற்கொடிகள், வானத்தைத் தூர்த்து விடுகின்றன. சங்கு, தாரை, காளம், பேரி, பம்பை, கண்டை, துடி, திமிலை, தட்டி, சின்னம் என்ற ஒலிக்கருவிகளும், முகிலிடியும் வெட்குமாறு படையிடையே நெருங்கி எம்மருங்கும் ஒலிக்கின்றன. ஒலிக்கருவியின் ஒலிமட்டுமா அங்குக் காண்கின்ரும்? ஒலிக்கருவியின் ஒலி ஒருபால்; படையோடு படைதாக்கி ஒளிவிட்டெழும் ஒலி ஒருபால்; குதிரையின் கழுத்திற் கட்டிய மணிக்கோவையின் ஒலி ஒருபால்; களிறுகளின் ஒலி ஒருபால்; தேரோட்டத்தின் ஒலி ஒருபால்; படைஞரின் செருக்குப்போல் எழும்ஆர்ப்பொலி ஒருபால்; இவையனைத்தும் ஒன்ருகிக் கடையூழியில் பெருமழை பொழியும்போது கரையுடைத்துப் பொங்கும் கடல்போல

எதிர்தோன்றும் தோற்றத்தைக் காண்மின். படையோ கடல்; அதன் இயக்கமோ, காற்றுற் புரளும் அலையாட்டம்; துகிற் கொடியோ கருமுகில்கள்; ஒலியோ இடி என்றிவ்வாறமைதல் காண்க. பேரூழிப் பெருங்காற்று, மேலும் மேலும் உலகின்மேல் வீசுவதுபோல, தேர், களிறு, குதிரை, காலாள் என்ற நால்வகைப்படையும், மேலும் மேலும் விரைந்து பரவுகின்றன. இவர்கள் பின்வர, மன்னவன் ஒரு குதிரைமேலேறி முன்னர் அரசர் வாழும் தெருவழியே வருகின்றான்.

தண்ணளிக் கவிகை:—இத்துணைச் சீற்றமும் இவனது தண்ணளியாய் எழுகின்றதைக் காண்மின். சிற்றெறும்பும் வெம்பி வாடாதபடி தன் குடைக்கீழ் நிழலில் உயிர்களை வைத்துக் காப்பவன், யானையும் மாவெட்டிகளும் சாவக் கண்டு வாளா இருப்பானோ? அவ்வருள் கருதியே அவ்வாறு வருகின்றான் என அவனது கவிகைமேல் வைத்துப் புனைந்துரைக்கின்றார் சேக்கிழார். மிக விரைவாகக் குதிரையை நடத்திவந்து, களிறும் மாவெட்டிகளும் வீழ்ந்து கிடக்கும் இடத்தைச் சேர்கின்றான் அவ்வேந்தன்.

புகழ்ச் சோழர் நிலை:—புகழ்ச்சோழரது நிலையையும், ஒப்புமை கொண்டே விளக்குகின்றார், சேக்கிழார்; காற்றும் மழையும் கலந்தடிக்கக் கலங்கிநிற்கும் கடையூழிக் கடலை இங்கு ஒப்புமை கூறுகின்றார்; இன்பமாலை யணிந்த இன்பக் கடல் இவ்வாறு கலங்குகிறது எனக் குறிக்கின்றார். பெருஞ் சீற்ற நிலையைப் பேச்செழாத பெருநிலையாகப் புனைந்துரைத்தல் காண்க. சிறுபுலவரே இந்நிலையில் புகழ்ச்சோழரைப் பேச வைப்பர். என்ன பேசக்கூடும்? ஒவ்வொரு நிலைக்கும் ஏற்ற ஒப்புமையைச் சேக்கிழார் எடுத்துக்கூறும் தகுதியும் பாராட்டற்பால தொன்றேயாம்; கடுங்காற்றும், கருமலையும்,

எரியும் முன்னர்க் கூறினார்; அரசன் சிற்றமாதலின், பெரு மழை, கடுங்காற்று, கருங்கடல் என்ற இவை எல்லாவற்றை யும் ஒன்றாய்த் திரட்டி ஒப்புமையாகக் கொள்கிறார்.

## அ. நான்காம் காட்சி—முடிச்சு

மனமாற்றம்:—மேலே நான்காம் காட்சியில், புகழ்ச் சோழனும் எறிபத்தரும், நிலைமாறி நிற்பதையும், மனமாறி நிற்பதையும், படிப்படியாகத் தெளிவுபடுத்துகின்றார் சேக்கிழார். ஓவியப்புலவர் முதலானோர் காட்டமுடியாத மனமாற்றத்தினைப் பாவாணப்புலவரே காட்டக்கூடும். இதனைப் புனைந்துரைக்குமிடந்தான் பாக்களின் உயிர்நிலை. பெரும்புலவரே இதனைப் புனைந்துரைக்க முன்வருபவர். மற்றையோர் ஓவியப் புலவ ரளவிலே நின்றுவிடுவர். இம்மனமாற்றத்தைப் புனைந்துரைப்பதிலேதான், சேக்கிழாரின் திருவருட்சிறப்பைக் காண்கிறோம். புகழ்ச்சோழரும் எறிபத்தரும் ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்டு, ஒருவர் ஒருபால் மனமாறி நிற்கின்ற வியப்பினைச் சேக்கிழாரே பாடத்தக்கார்; இதிலே புகழ்ச்சோழர் மாறுதலடைவதனை முன்னும், எறிபத்தர் மாறுதலடைவதனைப் பின்னுமாகப் பாடுகின்றார். இக்காட்சியில்தான் யாம் கூறிய கடவுட்பிணையல் எழுகின்றது.

"கடுவிசை முடுகிப் போகிக் களிற்றொடும் பாகர் வீழ்ந்த
படுகளம் குறுகச் சென்றான் பகைப்புலத் தவரைக் காணான்
விடுசுடர் மழுஒன்(று) ஏந்தி வேறிரு தடக்கைத் தாய
அடுகளி றென்ன நின்ற அன்பரை முன்பு கண்டான்." 34.

"பொன்றவ ழருவிக் குன்றம் எனப்புரள் களிற்றின் முன்பு
நின்றவர் மன்றுள் என்றும் நிருத்தமே பயிலும் வெள்ளிக்
குன்றவர் அடியார் ஆனார் கொன்றவர் இவர் என்று, ஓரான்
வென்றவர் யாவர் என்றான்வெடிபட முழங்கும் சொல்லான்." 35.

"அரசனுங் கருளிச் செய்ய அருகுசென் றணைந்து பாகர்
விரைசெய்தார் மாலை யோய்நின் விறற்களிற் றெதிரே நிற்கும்

திரைசெய்நீர் உலகின் மன்னர் யாருளர் தீங்கு செய்தார்
பரசுமுன் கொண்டு நின்ற இவர்எனப் பணிந்து சொன்னார்." 36.

அன்பரை முன்பு கண்டான்:—யானை எதிரே, அரசன், பகைவரைக் காண்கின்றான் இல்லை; மழுவேந்திய செருக்கொடுநின்ற அன்பரையே காண்கின்றான்; பொன்றவழருவிக் குன்றம்போலச் செங்குருதி யருவியாய்ப் புரளக்கிடக்கும் களிற்றினைக் காண்கிறான். கறைபட்ட மழுவைக் கண்டும் 'அவரே கொன்றவர்' என உய்த்துணர்கின்றானோ? மறந்தும், 'மனத்தால் சிவனடியார் கொல்வர்' என எண்ணான். அம்பலத்தே இன்பக் கூத்தாடிக் குணப்பெருங்குன்றாய் வாழும் புனிதனாரது வாலிய இன்பவழி நிற்கும் அடியாரன்றோ இவர்! இன்பமல்லது துன்பத்தைத் தரும் கொலைத்தொழில் புரிவரோ? 'தூயநெறி நின்றார் கொலை நெறி நில்லார்' என்று எண்ணிய அச்சோழன் 'இவர் கொன்றார்' என எவ்வாறு அறிவான் ? சோழன், அன்பர்களைப் பற்றிக் கொண்டிருந்த உயர்ந்த கருத்தும், அந்நாளைய அன்பரது பெருமையும் இதனால் நன்றாக விளங்குகின்றனவன்றோ? இக்கொள்கையை வற்புறுத்திப் பாடும் பெரிய புராணத்தைக் கொலை நூல் என்று எங்ஙனம் கூறுவது? அரசன், கொன்றவரை அறியாதவனாய் அருகே இருப்பவர்களை, "வென்றவர் யாவர்?" என வினவுகின்றான். சிவனடியாரது உயர்வை அறியும் சீரிய அறிவு கலங்கா நிலையிலிருக்கின்றானேனும், சினம் மாறியபாடில்லை வெடிபட முழங்கி, "வென்றவர் யாவர்" எனக் கேட்கின்றான் இவ்வரசன். இச்சோழனுடைய சினம் இவன் கைக்கடங்கி நிற்கின்றது; 'வா' என்றால் வரும்; 'போ' என்றால் போகும். அதற்கு இவன் அடிமையல்லன். அஃதே

இவனுக்கு அடிமையாகிறது. ஆதலின் அடியவர் இனமென்னும் ஏமப்புணையைச் சுடுகின்றதில்லை.

வெற்றியா தீங்கா?:—"வென்றவர் யாவர்" என்ற கேள்வியில் மற்றொரு குறிப்பும் காட்டுகின்றார் சேக்கிழார் பெருமான். இந்தக் கொந்தளிப்பனைத்தும் யானை வெட்டுண்டதாலன்றோ எழுகின்றது? புகழ்ச்சோழனது சீற்றத்தைக் கொண்டே எறிபத்தரது தறுகண்ணுண்மையை அளத்தல் வேண்டும். யானையை வெட்டிய செய்தியைத் தன்னை வென்ற செய்தியாகவே புகழ்ச்சோழன் கருதுகின்றமையை, 'வென்றவர் யாவர்' என்ற கேள்வியால் விளக்குகின்றார் நம்புலவர். அவ்வாறு அரசன் வினவ, மாவெட்டிகள் அருகே வந்து, "விரைமலர் மாலையை அழகொப்பனையாகக் கொண்டோய்! இவ்வானையை எதிர்த்து நிற்கும் ஆற்றலுள்ள மன்னரும் உலகில் உளரோ? பகைவர் பிறர் இல்லை. பகைத்து வென்றவர் ஒருவரும் இல்லை. ஈதோ மழுவேந்தி நிற்பவரே இத்தீங்கு செய்தார்" என அவனடி வணங்கித்தெரிவிக்கின்றனர். "வென்றி" எனப் பாராட்ட மனமில்லாது, இதனைத் தீங்கு என்று கூறும் மாவெட்டிகளது மன நிலையைக் காண்க. அரசன் கொள்ளையோ அழகிய வென்றி; ஏழையின் கொள்ளையோ தீய திருடு. ஈதே மாவெட்டிகளது கொள்கை. அழுக்காற்றினாலும் பகையினாலும் பிறரது உயரிய செய்கைகளையும்பழித்துரைக்கும் மாவெட்டிகளது கீழ் நிலையையும், தன்னைக் கொன்றாலன்ன தீமைபுரியும் பகைவரிடத்தே உயரிய செய்கைகளைக் கண்டபோது அதனை வென்றி எனப் பாராட்டும் அரசனது உயரிய நோக்கத்தையும் இரண்டொரு சொல்லில் விளக்கிவைக்கும் சேக்கிழாரது பெருமையை என் என்போம்!

குழையணி காதினுக் கன்பர் பிழைபடின் அன்றிக் கொல்லார்:—

"குழையணி காதி னுக் கன்பராங்
குணத்தின் மிக்கார்
பிழைபடின் அன்றிக் கொல்லார்
பிழைத்த(து) உண்டு என்(று) உட்கொண்டு
மழைமத யானை சேனை
வரவினை மாற்றி மற்ற
உழையைப் புரவி மேல்நின்(று)
இழிந்தனன் உலக மன்னன்" 37.

"மைத்தடங் குன்று போலு மதக்களிற் றெதிரே இந்த
மெய்த்தவர் சென்ற போது வேறொன்றும் புகுதா விட்ட
அத்தவம் உடையே னானேன் அம்பல வாண ரன்பர் [38.
இத்தனை முனியக் கெட்டேன் என்கொலோ பிழையென் றஞ்சி"

"செறிந்தவர் தம்மைநீக்கி யன்பர்முன் றொழுதுசென் றாஅ(து)
அறிந்திலே னடியே னங்குக் கேட்டதொன் றதுதான் நிற்க
மறிந்தஇக் களிற்றின் குற்றம் பாகரோ(டு) இதனைமாள
எறிந்ததே போது மோதான் அருள்செய்யும் என்று நின்றார்" 39.

"சிவனடியார்களோ திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்டவர்கள்" என்ற உறுதிக்கொள்கையைச் சீற்றம் மிக்க போதும் மறக்கின்றானில்லை அரசன். "இன்னிசைப்பாவாணரையே குழையெனக் காதில் அணிந்து இன்னிசை இன்பமாய் விளங்கும் இறைவனது அன்பர்களே இன்ப அருவி பாயும் குணப்பெருங்குன்றாவர். அத்தகையானின் அத்தகைய அடியார், தம் திறத்தன்றி பிறர் திறத்தேயும் பிழைபட்டிருந்தால்தான் பெருங்களிற்றைக் கொல்வர். உயிரைக் காப்பதே உயர்ந்தோர் பெருமை. பிறருயிரைக்காக்கவே

இவ்வாறு செய்திருப்பர். இவ்வானை எவரை எல்லாம் கொல்லச் சென்றதோ? அதனைத் தடுக்கப்புக்கபோது, வெட்டும் இதன்மேல் வீழ்ந்ததோ?''—இவ்வாறு எண்ணமிடுகின்றான் புகழ்ச்சோழன். களிறும் மாவெட்டிகளுமே தவறு செய்திருத்தல் வேண்டும் என முடிவுகட்டுகின்றான்; யானையும் படையுமாய்ப் பின் வருகின்றவற்றை நிறுத்திவிட்டுத் தானும் குதிரையினின்றும் இழிந்து கால்நடையாக அன்பரெதிரே போகின்றான். காற்றும் கடலும் என வந்தவன் அடியவரைக் கண்டதும் கால்நடையாகப் போதலை இவ்வாறு அழகுபடப் புனைந்துரைக்கின்றார் சேக்கிழார். இம்மனமாற்றத்தை ஓவியப் புலவர் எழுத இயலாது. கடுங்காற்றென வந்தோன் தென்றல் என உலவுகிறான்; அம்மட்டுமா? இரக்கமும் கொள்கிறான். "மதர்த்த கருங்களிற்றின் எதிரே, உண்மை நோன்புடைய இப்பெரியார் போயபோது, இவர்க்கு வேறொரு கெடுதியும் நேரிடாமற் போனதும் எனது நோன்பின் பயனே அன்றோ? யான் செய்த நோன்பே நோன்பு. இன்பக் கூத்தாடுகின்ற இறைவனின் அன்பர், இன்பமாய் இருப்பதே இயல்பு. அவ்வியல்பு கெட முனிவோடும் முகங்கோணி நிற்கச் செய்த பிழைதான் யாதோ?'' என்று அஞ்சா மன்னரும் அஞ்சுகின்றார். தம்முடன் வருகின்றோரை ஒரு புறத்தே நீக்கித் தாம் மட்டும் தமியராய்ச் சென்று அன்பரைத் தொழுகின்றார்.

போதுமா? :—"அறிந்திலேன் அடியேன்; அங்குக் கேட்டதொன்று. ('சிலர் கொன்றனர்' என்றன்றோ காவலர் வந்து சொல்லினர்.) அது நிற்க. (இவ்வாறு தாம் வந்த கோலத்தைச் சோழனார் விளக்குகின்றார்) நல்வழியின் நின்றும் பிறழ்ந்த இந்தக் களிறு செய்த குற்றத்திற்காக இதனையும்

இம் மாவெட்டிகளையும் கொன்றது போதுமோ? மேலும் ஒறுத்தல் வேண்டுமோ? யாதோ திருவுளம்? அருள் செய்தல் வேண்டும்'' எனச் சோழனார் இரந்து நிற்கின்றார்.

பல்வேறுநிலை:—சீற்றத்தொடு வந்தவர் சீற்றந் தணிதல் ஒருநிலை; சீற்றந்தணிந்து அடியார்க்கு இரங்குதல் ஒருநிலை; தம்மை ஒறுத்தலை வேண்டி நிற்றல் ஒருநிலை; உயிரையே இழக்க முன்வருதல் ஒருநிலை: அப் பின்நிலையை மேலே புனைந்துரைக்கின்றார் சேக்கிழார்.

''மன்னவன் றன்னை நோக்கி வானவர் ஈசர் நேசர்
'சென்னி!இத் துங்க வேழஞ் சிவகாமி யாண்டார் கொய்து
பன்னகா பரணர்ச் சாத்தக் கொடுவரும் பள்ளித் தாமந்
தன்னைமுன் பறித்துச் சிந்தத் தரைபடத் துணித்து வீழ்த்தேன்''
40.

''மாதங்கந் தீங்கு செய்ய வருபரிக் காரர் தாமும்
மீ(து)அங்குக் கடவு வாரும் விலக்கிடா தொழிந்து பட்டார்
ஈ(து)இங்கு நிகழ்ந்தது' என்றார் எறிபத்தர் என்ன அஞ்சிப்
பாதங்கண் முறையால் தாழ்ந்து பருவரைத் தடந்தோள் மன்னன்''
41.

'' 'அங்கணர் அடியார் தம்மைச் செய்தவிவ் வபரா தத்துக்(கு)
இங்கிது தன்னாற் போதா(து) என்னையும் கொல்ல வேண்டும்
மங்கல மழுவாற் கொல்கை வழக்கும்அன்(று); இது ஆம்' என்று
செங்கையால் உடைவாள் வாங்கிக் கொடுத்தனர் தீர்வு நேர்வார்''
42.

''வெந்தழற் சுடர்வாள் நீட்டும் வேந்தனை நோக்கிக் 'கெட்டேன்
அந்தமில் புகழான் அன்புக்(கு) அளவின்மை கண்டேன்' என்று
தந்தவாள் வாங்கமாட்டார் தன்னைத்தான் துறக்கும் என்று
சிந்தையால் உணர்வுற்(று) அஞ்சி வாங்கினார் தீங்குதீர்ப்பார்.'' 43.

"வாங்கிய தொண்டர் முன்பு மன்னனார், தொழுது நின்றே
'ஈங்குஎனை வாளினாற்கொன்(று) என்பிழை தீர்க்க வேண்டி
ஓங்கிய உதவி செய்யப் பெற்றனன் இவர்யால்' என்றே
ஆங்(கு)அவர் உவப்பக்கண்ட எறிபத்தர் அதனுக்(கு) அஞ்சி." 44.

"'வன்பெருங் களிறு பாகர் மடியவும் உடைவாளைத் தந்(து)
என்பெரும் பிழையி னாலே என்னையும் கொல்லும் என்னும்
அன்பனார் தமக்குத் தீங்கு நினைத்தனன்' என்று கொண்டு
'முன்(பு)என(து)உயிர்செகுத்துமுடிப்பதேமுடிவு'என்றுஎண்ணி."
45.

"புரிந்தவர் கொடுத்த வாளை அன்பர்தம் கழுத்திற் பூட்டி
அரிந்திடல் உற்றபோதில் அரசனும் 'பெரியோர் செய்கை
இருந்தவா(று) இதுஎன்கெட்டேன'என்(று) எதிர் கடிதிற் சென்று
பெருந்தடந் தோளாற் கூடிப் பிடித்தனன் வாளும் கையும்." 46.

'ஈது இங்கு நிகழ்ந்தது':— வானவர்க்கும் தலைவனை கடவுளோடு அன்புறவன்றி வேறொருறவும் கொண்டாடாது, அவ்வன்புவழியே உலகுக் குதவும் திருநெறியில் நிற்கின்ற எறிபத்தர், அரசருக்கும் அஞ்சாதவராய் எதிருரை பகர்கின்றார். "வாழிய அரசே" என்று தொடங்கிப் பேசவும் அவர் மனம் ஒருப்படவில்லை. அவருடைய சினம் அரசனளவும் சென்றதாகலின் அவ்வாறு பேசத்துணிவரோ? "சென்னியே! பொல்லாத பாம்பையும் அழகொப்பனையாகக் கொண்டு இன்பமெனத் தோன்றச்செய்யும் இறைவனுக்கு, அழகொப்பனை செய்யவேண்டிச் சிவகாமியாண்டார் கொய்து வந்த நல்ல மலர்களை, இந்த வேழம் பறித்துக் கீழே சிந்தியது. பூப்பட்டபாடு இக்களிறும் பட்டுத் தரையில் வீழ்ந்து புரளும்படி இதனைத் துணித்தேன். இவ்வாறு இவ்வானை தீங்கு செய்தபோது, இதனை மாவெட்டிகளும் குத்துக்

கோலாளரும் விலக்கினர் இல்லை. ஆதலின் அவர்களும் இறந்தனர். ஈதே இங்கு நிகழ்ந்தது" என்று நிகழ்ந்தது கூறு கின்றார் எறிபத்தர்.

**தீர்வுநேர்வார்:**—இறைவனது அடியாருக்குச் செய்த இக் குற்றம் தம்மையே சேர்ந்ததென புகழ்ச்சோழர் மனமுருகு கின்றார்.

> *"நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்*
> *போதர விட்ட நுமரும் தவறிலர்*
> **நிறையழி கொல்யானை நீர்க்கு விட்டாங்குப்**
> *பறையறைந் தல்லது செல்லற்க என்னா*
> *இறையே தவறு டையான்."* —**கலித்தொகை**

என்று புலவர்களும் ஒப்புமையாக எடுத்துக் காட்டுவது "யாது? நிறையழி கொல் யானையை நீர்க்கு விடுதலேயன்றே? யானே தவறுடையேன். ஆதலின் என்னையும் கொல்லுதல் வேண்டும். எனக்காக இறந்த யானையும் மாவெட்டிகளும், அந்த வழியில் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய்த் தலைசிறந்து நின்றனர்; அதனால், உமது மழுவாற் கொல்லப் படும் பேறுபெற்றனர். அன்பர்க்குதவும் அன்பு வடிவாம் அம்மழுவோ, நல்லனவற்றிலெல்லாம் நலம் மிகச் சிறந்தது. இக்கொடுமை அனைத்திற்கும் முதலாக நின்ற என்மேல் பட்டு அம்மழுவானது தூய்மை குறைதல் தகாதன்றே? யானும் கொலையுணல் வேண்டும்! மழுவுங் கொல்லுதல் தகாது. ஆதலின் என் வினையே என்னைச் சுடுவதுபோல என் கை வாளே என் கழுத்தை அரிவதாக" என்று புகழ்ச்சோழர் தம் உடைவாளை உறையினின்றும் எடுத்து நீட்டுகின்றார்.

**சோழன் மாறிய நிலை:**—தன்னையும் இழக்கும் தனிப் பேரன்புநிலையை, இவ்வாறு படிப்படியாய் விரித்துரைத்து முடி

வில், உயர் நிலையையும் புனைந்துரைக்கும் சேக்கிழார் பெருமையே பெருமை. இவ்வாறு கழுவாய் இயற்ற ஒருப்படுகின்றார், காற்றொடு கடலெனவந்த காவலர் பெருமானார். கொன்றும் சிவந்த அவரது கை - கொடுத்தும் சிவந்தகை - இன்று தன்னையுமிழக்கத் தந்துதவும் கையாய் இயற்கையழகு எழில்பெற நிற்கிறது; அவ்வின்பத்தால் சிவந்தகையாய் விளங்குகிறது. நீட்டிய வாளோ நன்றாகத் தீட்டப்பட்டு, மூண்ட நெருப்புப்போலப் பளபள என்று மின்னுகிறது. இவ்வாறு கடலானது கொந்தளிப் படங்கிக் கரையி லடங்குவதனையும், அலைகடல் வாளளவாய்க் குறுகி அன்பர் கையிடை நிற்பதனையும், ஓவியமாகச் சேக்கிழார் எழுதிக் காட்டுகின்றார்.

தீங்கு தீர்ப்பார்:—மேலே எறிபத்தர் மனமாறுவதனையும் ஓவியமாக நம் புலவர் எழுதிக்காட்டுகின்றார். எறிபத்தரது சீற்றம் அரசன்வரையிலும் சென்றது எனக் கண்டோம். ஆனால், புகழ்ச் சோழனார் வாளை நீட்டியபோது அச் சீற்றம் மறைகிறது. எறிபத்தர் ஒரு புதிய உலகில் புகுகின்றார்; காற்றொடு கலந்த தீயெனப் பொங்கி வெதும்பியவர், தீயிடை வைத்த நெய்யென உருகிப் பின், உள்ளங் குளிர்கின்றார். "கெட்டேன்! தம்மையும் இழந்து நிற்க, எதிர் வந்து தம் வாளைநீட்டித் தமதுயானையைக்கொன்ற என்னையே தம்மைக் கொல்லுமாறு வேண்டி நிற்கும் இவரினும், பெரும்புகழ் பெற்றார் யாரே? இவருடைய அன்புக்கும் அளவு உண்டோ? சிவகாமியாண்டார் மலர் இழந்தபோது, யானோ அவ்விழவுக்கு மனம்பொறாது, யானையைக் கொன்றேன். இவரோ அவ்விழவுக்கு மனம்பொறாது, தம்மையே கொல்ல வாளை நீட்டுகின்றார். தன்னிழவிற் றழைத்தோங்கும் தனிப்பெரும்

அன்புதான் இருந்தபடி என்னே! 'அன்பிலார் எல்லாம் தமக் குரியர்; அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்றபடி பிறர்க்கென்றே உடலும் உயிரும்பெற்று வாழும் பெரியார் அல்லரோ இவர். யானோ பிறருயிரைப்பிறர்க்கெனக்கொண்டு வாழ்ந்தேன். என்னுயிரைப் பிறர்க்கெனக் கொண்டு வாழ்ந் தேனோ? இப்பெரியாரது உடைவாளாம் இவ் அன்பின் கொழுந்தையே வாங்கி இவரையே வெட்டுவதோ? எண்ண வும் போமோ இவ்வாறு?" என்று வாளை வாங்காது, வாளா நிற்கின்றார் எறிபத்தர். இதற்குள் மற்றோர் எண்ணம் தோன்று கிறது. 'தம்மைத் தாமே கொன்று கொண்டால், என் செய் வது?' என உணர்ந்தபோது, அதற்கஞ்சி, அத்தீங்கு நேரிடாத வாறு, வாளை அரசர் கையினின்றும் வாங்கிக் கொள்கின்றார் மெய்த்தொண்டர்.

'ஓங்கிய உதவி செய்யப் பெற்றேன்'—வாங்கியபோது மன்னவனார் முன்னினும் பெருமகிழ்ச்சி யடைகின்றார். தம்முயிரை இழக்கும்போதும் இன்பமே அடைந்துநிற்கும் இன்ப அன்பின் இயல்பினை இவ்வாறு விளக்குகின்றார் சேக் கிழார். தாம் அரசநெறி கோடியதற்கு எறிபத்தர் கழுவாய் செய்ய நோக்தமையைக் கண்ட புகழ்ச் சோழனார், எறி பத்தரைப் புகழ்கின்றார்; "ஈங்கு என் கை வாளினாற்கொன்று என் பிழை தீர்க்க வேண்டி, ஓங்கிய உதவிசெய்யப் பெற்ற னன் இவர்பால்," என்று மகிழ்கின்றார். கடமைக் கஞ்சிக் கழுவாய் நேர்வார் ஒரு சிலர். அவர் நிலையும் வியக்கத்தக் கதேயாம். கடமையை யுவந்து கழுவாய் விரும்பும் பெரி யாரோ மிகச் சிலர்.

**உவகை கண்டு அஞ்சுதல்:**—அவ்வாறு உவப்புடன் நின்ற அரசரது ஒப்பற்ற நிலையைக்கண்டு அஞ்சுகின்றார் எறி

பத்தர்; "தம்முடைய வெற்றி யானையையும், மாவெட்டிகளை யும், நான் கொன்றதைப் பொருட்படுத்தாது, என் பெரும் பிழையினாலே என்னையும் கொல்லும், என்னும் அன்பனார் தமக்குத் தீங்கு நினைத்தனன். நானொரு கொடியேன். நானே கொலைக்குரியேன்", எனத் தம்மைப்பழிக்கின்றார்.'என துஉயி ரைச் செகுத்து முடிப்பதே முடிவு' என அவர் முடிவுகட்டுகின் றார். மன்னவனார் விரும்பிக் கொடுத்த வாளை, எறிபத்தர், தம் கழுத்திற்பூட்டி அரியத் தொடங்குகின்றார். புகழ்ச் சோழர், தம்மை யிழந்துநின்று வாளை நீட்டியபோது, அவ்வழியாக அன்பெனுந் தீ எறிபத்தரிடமும் பரவி மூண்டெரிவதால், அவரும் தம்மை இழந்து நிற்கும் அன்பொளியாக விளங்கு கின்றார். அவ்வகையில் எறிபத்தர்க்குப் புகழ்ச்சோழனார் ஒரு வழிகாட்டியல்லரோ?

பரிவில் வந்த இடுக்கண் :—காண்கின்றார் அரசர். "அந்தோ! இவர் கொலைக்குமா என் வாள் துணையாதல் வேண்டும்? இப்பெரியாரது செய்கை இருந்தவாறென்னே! என்னைக் கொல்வார் எனமகிழ்ந்தேனே! இவரோ கொலையுண் பது; கெட்டேன்" என்று வருந்தி விரைந்துபோய்த் தமது அகன்றதோளால் தம்வலி யெல்லாம்கொண்டு எறிபத்தர் வாளையும் கையையும் அசைக்க முடியாதபடி இறுகப் பிடித் துக்கொள்கின்றார். இவ்வாறு இருவரும் அன்பினால் முடிச்சுப்பெற்றுப் பிணைந்து விளங்குகின்றனர். ஈதே கடவுட் பிணையல். இதே அன்பு முடி.

## ௬. ஐந்தாங் காட்சி—முடி அவிழ்த்தல்

"வளவனார்விடாது பற்ற மாதவர் வருந்து கின்ற
அளவிலாப் பரிவில் வந்த இடுக்கணை யகற்ற வேண்டிக்
களமணி களத்துச் செய்ய கண்ணுதல் அருளால் வாக்குக்
கிளரொளி விசும்பின் மேல்வந்(து)எழுந்தது பலரும் கேட்ப." 47.

"தொழுந்தகையன்பின் மிக்கீர் தொண்டினை மண்மேற்காட்ட
செழுந்திரு மலரை யின்று சினக்கரி சிந்தத் திங்கட்
கொழுந்தணி வேணிக் கூத்த ரருளினாற்கூடிற்(று)என்றங்(கு)
எழுந்தது பாக ரோடும் யானையும் எழுந்த தன்றே." 48.

"ஈரவே பூட்டும் வாள்விட்(டு) எறிபத்தர் தாமும் அந்த
நேரியர் பெருமான் தாள்மேல் விழுந்தனர். நிருபர் கோனும்
போர்வடி வாளைப் போக எறிந்தவர் கழல்கள் பற்றிப்
பார்மிசைப் பணிந்தார் விண்ணோர்பனிமலர் மாரிதூர்த்தார்." 49.

திருவருண்மொழி:— ஐந்தாவது காட்சியிலே, இக்கட வுட் பிணையல் அவிழ்தலால் அன்பொளியும் அன்பு மண மும் வீசிக் கமழ்வதனை நுகர்கின்றோம். மேற்கண்ட சிக் கல் முடிச்சை அவிழ்ப்பவர் யார்? திருவருளே அவிழ்த்தல் வேண்டும். திருவருளுலகிடையே இருந்தன்றோ, திருவருண் மொழிப் புலவராம் சேக்கிழார் தமது நூலைப் பாடுகின்றார். இறத்தற் கில்லையே என்று இருவரும் இடுக்கண் உற்றுச் சிக்கிக் கிடக்கின்றனர். திருவிளையாடல் புரிந்தருளும் இறை வனுக்கும் இதனைக் காணப் பொறுக்க முடியவில்லை. நல்லன வும் தீயனவும் எல்லாம் அவன் செயல் அன்றோ? நஞ்சுண்டு காப்பான்; கண் திறந்து எரிப்பான். ஆக்கலும் வல்லான்; அழித்தலும் வல்லான். அவனுடைய திருவிளையாடல் இருந்தபடி அது. இறைவன் இங்கும் யானையைக் "கொன்று

இவர்களையும் இடுக்கணில் நிற்க வைக்கின்றான்; கொன்றது போக அருள்செய்யவும் வருகின்றான். அனைவரும் கேட்க அங்கே வானிடைத் திருவருண்மொழி எழுகின்றது. "எல்லாம் திருவருட் செயல்'' என்பது எல்லார் காதிலும் விழுகிறது. அனைவரும் புத்துயிர் பெறுகின்றனர். இறந்தவர் எழுகின்றனர். எறிபத்தர் ஈரவே பூட்டும் வாளைப் போக விட்டு, சோழனார் தாள் மேல் விழுகின்றனர். சோழர் பெருமானும், போர் வடிவாளைப் போக எறிந்து, எறிபத்தரது கழல்களைப் பற்றிப் பார்மிசைப் பணிகின்றனர். இடுக்கணால் எழுந்த பிணையலைக் கண்டோம்; இதுபோது இன்ப அன்பினால் எழுந்த பிணையலைக் காண்கின்றோம். வானவரும்கண்டு மலர்மாரி சொரியத்தக்க காட்சியன்றோ ஈது. இந்நிலையில் மறையவர் என்றும் மன்னர் என்றும் வேற்றுமை இல்லை.

குறைவெல்லாம் நிறைவாதல்:—

"இருவரும் எழுந்து வானில் எழுந்தபேர் ஒலியைப் போற்ற
அருமறைப் பொருளா யுள்ளார் அணிகொள்பூங்கூடைதன்னில்
மருவிய பள்ளித் தாமம் நிறைந்திட வருள மற்(று)அத்
திருவருள் கண்டு வாழ்ந்து சிவகாமியாரும் நின்றார்." 50.

"மட்டவி ழலங்கல் வென்றி மன்னவர் பெருமான் முன்னர்
உள்தரு களிப்பி னோடும் உறங்கிமீ(து) எழுந்த(து)ஒத்து
முட்டவெங் கடங்கள் பாய்ந்து முகிலென முழங்கிப் பொங்கும்
பட்டவர்த் தனத்தைக் கொண்டு பாகரும் அணைய வந்தார்." 51.

'அன்பர்க்குத் தீங்கிழைத்தோம்' என்று மனம்வாடிய சோழர் பெருமானார், அவ்வருண்மொழிகேட்டு மனந்தளிர்க்கின்றார்; அவ்வருளைப் போற்றுகின்றார். எறிபத்தரும் அம்மொழிகேட்டு வியப்படைந்தவராய் அருளை ஏத்துகின்றார். மலரும் கூடையில் நிறைகிறது. சிவகாமியாரும் குறைதீர்ந்து

தம்வழியே போகின்றார். எழுந்த யானையும் மாவெட்டி களும் சோழனார் அருகே வருகின்றனர்.

வாழ்ந்து நின்றார்:-முன்னின்ற குறைகளெல்லாம் இங்கு நிறைவாகின்றன. சிவகாமியாண்டார் பூத்தொண்டினை, அழ கொப்பனையின் அருங்குறிப்பாகக் கொண்டு,நோன்புநோற்று வந்தனர்; அருங்குறிப்பை மறந்து, பூவே பொருள் என எண்ணியதால் அன்றோ, மலரை இழந்தபோது வாடிவதங்கி முறையிடலானார். யானை வந்து பூப்பறித்த நிலையிலும் பொலியும் ஓர் அழகொப்பனையை, அவர் காணமாட்டாதார் ஆயினர்; தடிகொண்டடிக்க ஓடினர். அதன்பயனை அப் போதே தரையடித்து வீழ்ந்து துய்த்தார். கடவுளை மறந்து கல்லிற்காகவும் செம்பிற்காகவும் கைகலப்போர் வரலாறே ஈதாகும். உயர்நிலை நின்ற முனிவரையும் பற்றெனும் பகைவன், பூமேல்பற்றென்றும், கல்மேல் பற்றென்றும், கரந்துரு வெய்தி வாட்டுவன். எல்லாம் திருவருட்செயல் என்று தெளிந்தபொழுது, அப்பகைவனின் மயக்கம் அறவே ஒழி யும். அந்நிலை அடையும் வரையில் துன்பமும் வந்துசேரும். சிவகாமியாண்டாரும் புலம்பி நின்றாரன்றோ? அருண்மொழி கேட்டதும் இன்ப அன்புருவாகின்றார். சிவகாமியாண்டார், அப்போதுதான், கதறி நிற்கும் முனைப்புநிலை நீங்கி, 'எல்லாம் இறைவன்செயல்' என்பதை முற்றுமுணர்ந்து, முடிவிலா இன்பத்தே மூழ்குகின்றனர்.

சோழர்:—புகழ்ச்சோழர் நின்ற முன்னையநிலையும் மிகப் பெரிய நிலையே ஆகும். இன்பத்தோடும் இறக்க அவர் முன் வருகின்றார். ஆனால் அவரும் அன்றோ 'இறத்தற்கில்லையே' என்று இடுக்கண் உறுகின்றார். இறத்தற்கும் முந்தி நிற்பது, அன்புநிலையின் அறிகுறியானாலும், இறந்தொழிவது ஒரு

நாளும் அன்பு நிலையாவதில்லை. என்றும் இன்பமாய் வாழும் வாழ்க்கையே அன்பு நிலையாகும். 'எல்லாம் திருவருட் செயல்' என்பதை மறந்ததால் அன்றோ, அவரும் இடுக்கண் உறுகின்றார். அன்பு நிலை அறிவுநிலையுமானால் அன்றோ, உயர்நிலையாவது. 'எல்லாம் திருவருட் செயல்' என்ற தெளி வெழுந்தபோது இடுக்கண் ஒழிகின்றது. அவர் அப்போதே இன்ப அன்புருவாகின்றார்.

எறிபத்தர்:—எறிபத்தர் யானையைக் கொல்கிறார்; அரசர்மேல் சீற்றம் கொள்கிறார்; அவர் பெருமை கண்டு தன்னையே கொல்லப்புகுகின்றார். சிவகாமியாண்டாரிடத்தும் புகழ்ச்சோழரிடத்தும் இன்பம் விளங்கியதைச் சேக்கிழார் குறித்ததுபோல, எறிபத்தரைப் புனைந்துரைக்கையில் குறிக்க வில்லை. சிவகாமியாண்டார் பூப்பறித்து இன்பம் பெறுவதை நம்புலவர், நன்கு புனைந்துரைக்கின்றார். ஆனால் எறிபத்தர் இதற்கு முன்னர் அத்தகைய இன்ப வாழ்க்கையில் திளைத்த மையைச் சேக்கிழார் சுட்டவில்லை. திருவருண்மொழி எழுந் ததும், அவரும், இன்பக்கடலில் குளிக்கின்றார். அவரும் இன்ப அன்புருவாகின்றார். அன்பென்றால், எவர் மேலும் உள்ளம் நெகிழ்ந்துருகவேண்டும் அன்றோ? முன்னர், யார் யார்மேல் சீறி எழுந்தாரோ, அவ்வவர்மேல், பின்னிலையில் ஆறியமனதோடும் அன்பு பாராட்டுதலைச் சேக்கிழார் எடுத் துக் காட்டுகின்றார். அந்த நிலைதான், எறிபத்தரது மனமாற் றத்தை நன்கு விளக்குகின்றது. எரிமலையென வந்தவர், கொந்தளிப்படங்கி, அசையாத அம்மலைத்திருவிளக்கெனத் தூயராய் நின்று, பின் அமுதநிலவெரிக்கும் திருவிளக்காய் அன்பொளியைப் பொழிகின்றார். சோழன் வாளை நீட்டிய தும், அவன்மேல் கொண்ட சீற்றம் மாறுகிறது. சோழன்மேல்

அன்பு பூண்டு, தம்மையே வெறுத்துத் தம் தலையை வெட்டிக்கொள்ளப் புகுகின்றார் இந்த எறிபத்தர்.

சீறிய ஆனைமேல் ஆறிய அன்பு:—

"ஆனசீர்த் தொண்டர் கும்பிட்டு 'அடியனேன் களிப்ப இந்த
மானவெங் களிற்றை யேறி மகிழ்ந்தெழுந் தருளும்' என்ன
மேன்மையப் பணிமேற்கொண்டு வணங்கிவெண் குடையின் நீழல்
யானைமேல் கொண்டு சென்றார் இவுளிமேல் கொண்டு வந்தார்."
52.

"அந்நிலை எழுந்த சேனை ஆர்கலி எழும் ஒன்றாய்
மன்னிய ஒலியின் ஆர்ப்ப மண்ணெலாம் மகிழ்ந்து வாழ்த்தப்
பொன்னெடும் பொதுவில் ஆடல் நீடிய புனிதர் பொற்றாள்
சென்னியிற் கொண்டு சென்னி திருவளர் கோயில் புக்கான்." 53.

மேலே, சிவகாமி யாண்டாருக்குத் தீங்குசெய்து, தன் மேலும்பாய்ந்து கொல்லவந்த அந்த யானையினிடத்தும் அன்பும் கொள்கின்றார் எறிபத்தர். இவ்வுயரிய அன்பு நிலையைக் காட்டவே, ஐந்தாங் காட்சியைக் காட்டுகின்றார், நம் புலவர். 'எல்லாம் திருவருட் செயல்' என்ற திருவருண்மொழியைக் கேட்டபின், அத்திருவருள் வழி நின்ற அவ்வியானைமேலும் அன்பு வெள்ளம் பெருகுகின்றது. 'திருவருள் வழிநின்ற அவ்வரசன், திருவருள் வழிநின்ற அவ்வானைமேல் ஏறிச்செல்லுதலே தகுதி' என ஒரு தோற்றமுண்டாகின்றது. அவ்வாறே செய்தல் வேண்டும் எனப் புகழ்ச்சோழனாரை வேண்டுகின்றார் எறிபத்தர்; அக்காட்சியைக் காண வேணவா கொள்கின்றார்; அரசனேறும் பெருமையையும், அரசனேறியபோது அவ்வானை பெறும் தோற்றப் பொலிவையும், கண்டு களிக்கவே விரும்புகின்றார். வேழத்தின் மேலெழுந்த அன்பன்றோ ஈது? உண்மை இன்ப அன்பு, இவ்வாறு எதனையும் தன்னுட்

கொண்டு இன்பமாய் ஒளிரும், எனக் காட்டிய சேக்கிழாரே இன்ப அன்பின் இயல்பினை அறிவார். புகழ்ச்சோழனும், எறிபத்தர் வேண்டியபடியே செய்தமையைச் சொன்னயம் பெருகப் பாடுகின்றார் சேக்கிழார். 'யானைமேல்கொண்டு சென்றார்; இவுளிமேல் கொண்டு வந்தார்.' எழ்கடலும் ஒன்றாய் ஒலிப்பதுபோலப் படைகள் திரண்டு எழுந்து களிப்பினால் ஆர்க்கின்றன. மண்ணவர் மகிழ்ந்து வாழ்த்துகின்றனர்.

திருப்பணி நோக்கிச் சென்றார்:—புகழ்ச்சோழனர், யானை மேலேறிச் செல்வதனை அழகிய கோலம் என எண்ணாது அடியவரிட்ட திருப்பணி என்றே எண்ணிப்போகின்றார் எனச் சேக்கிழார் எடுத்துக் காட்டும் நுட்பம் போற்றத்தக்கதாகும். இக்காட்சியைக் காண்கின்றார் எறிபத்தர்; இன்ப அன்புருவாகின்றார்.

"தம்பிரான் பணிமேற் கொண்டு சிவகாமி யாரும் சார
எம்பிரான் அன்ப ரான எறிபத்தர் தாமும் 'என்னே !
அம்பலம் நிறைந்த தொண்டர் அறிவதற்(கு) அறியார்' என்று
செம்பியன் பெருமை யுன்னித் திருப்பணி நோக்கிச் சென்றார்."

54.

'என்னே, அம்பலம் நிறைந்தார் தொண்டர் அறிவதற்கரியார்' என்று செம்பியன் பெருமையுன்னித் திருப்பணி நோக்கிச் செல்கின்றார். சோழனே இவருடைய மனத்தை மாற்றினவன், ஆதலின் அந்த வழிகாட்டியாம் அன்பனை நினைத்தே செல்கின்றார்.

காற்றடங்குதல்:—இவ்வாறு அமைதியைக் காட்டி முடிக்கின்றார் சேக்கிழார். யானையோ கடுங்காற்றில் சுழலும் கருமலை என வந்தது; காற்றொழிந்து அரசனைத் தாங்கி ஆட்டுக்குட்டியென அடங்கிச் செல்கின்றது. கடுங்காற்றோடு

எழுந்த தீ யென வெதும்பிய எறிபத்தர், காற்றெழிந்த விளக்கென அன்புநிலை நிற்கின்றார். காற்றோடு கலந்த கடலும் காரும் என வந்த புகழ்ச்சோழரோ, கடவுள் பள்ளிகொள்ளு மாறு காற்றிலாதடங்கிய பாற்கடல் என அன்புருவாகின்றார். இவர்களது மனக்கொந்தளிப்பைப் புனைந்துரைக்க வந்தவர், காற்றோடு வைத்தே புனைந்துரைத்தல் காண்க. காற்றடங்கியதுபோல இவர்கள் மனமும் அடங்குகின்றது பின்னிலையில்.

முடிவு:—

மற்றவர் இனைய தான வன்பெருந் தொண்டு மண்மேல்
உற்றிடத் தடியார் முன்சென் றுதவியே நாளும் நாளும்
நற்றவக் கொள்கை தாங்கி நலமிகு கைலை வெற்பிற்
கொற்றவர் கணத்தின் முன்னுங் கோமுதற் றலைமை பெற்றார்.''

55.

''ஆளுடைத் தொண்டர் செய்த
ஆண்மையுந் தம்மைக் கொல்ல
வாளினைக் கொடுத்து நின்ற
வளவனார் பெருமை தானும்
நாளுமற் றவர்க்கு நல்கும்
நம்பர்தா மளக்க லன்றி
நீளுமித் தொண்டி னீர்மை
நினைக்கில்ஆர் அளக்க வல்லார்?''

56.

## ௧௦. சிறப்பியல்புகள்

மூவொற்றுமை :—யவன நாட்டறிஞர்கள், கூத்து நூலில் வரும் வரலாறு முழுதும் ஓரே இடத்து நிகழவேண்டும்; ஓரே காலத்தில் நிகழ்தல்வேண்டும்; புனைந்துரையும் பலவாகிக் கலங்காது ஒன்றாகித் தெளிதல்வேண்டும் என்று வற்புறுத்துகின்றனர்; இட ஒற்றுமை, காலவொற்றுமை புனைந்துரை ஒற்றுமை (Unite of place, time and story) என்ற இம் மூவொற்றுமையையும் வேண்டுவர். இப்புனைந்துரை அவ்வாறமைந்துள்ளதன்றோ ?

யானையே நடுவிடம்:—பலவகையான மனக்கொந்தளிப்புகளும் யானையைச் சுற்றியே எழுகின்றன. ஆதலின் யானையே இப்புனைந்துரையின் நடுவிடம் என்றோம். சிவகாமியாண்டாருடைய அன்பைக்காட்டும் முதற் காட்சியிலும், யானையே வந்து பூவைச் சிந்தி, இப்புனைந்துரையில் அவரைச் சிக்க வைக்கின்றது. அம்முறையீட்டைக் கேட்ட எறிபத்தர், இரண்டாங் காட்சியிற் சிக்குண்டு யானையைச் சென்று வெட்டுகின்றார். யானை வெட்டுண்டதைக் கேட்ட சோழர், ஆற்றாமை மீதூரப் பெற்றுத் தம் படையொடும் வந்து, மூன்றாங் காட்சியில் சிக்குண்கிறார்; யானை இறந்ததாலன்றோ படை எடுக்கின்றார். இன்மை முகத்தால், யானை, அங்கும் விளங்கிப் புனைந்துரையை இயக்குகின்றது. நான்காம் காட்சியில் அவ்வானையெதிரே, எறிபத்தரும், புகழ்ச் சோழரும், வாளோடு கையுமாய், இறப்பதற்கு 'யான் முந்தி, நீ முந்தி' எனநின்று, சிக்குண்டு விளங்குகின்றனர். ஐந்தாங் காட்சியில், அவ்வானை உயிர்பெற்றெழுந்து, எறிபத்தரது அன்போடு அரசனையும் மேற்கொண்டு அழகோடு செல்கிறது. எனவே,

எறிபத்தாது புணர்துவை, இவ்வாணையின் புகழ்துவையாகும். யானையின் மாறுதல்களோடு எறிபத்தாது மனநிலையும் மாறிக்கொண்டே போகின்றதன்றோ?

பலவேறு அன்புநிலை:—இவ்வைந்து காட்சியும் பலவகையான அன்பின் காட்சிகளேயாம். முதற்காட்சியில், பூத்தொண்டு புரியும் சிவகாமியாண்டாரது அன்பினைக்காண்கின்றோம். பூவிழுந்து புலம்புகின்றமையும் காண்கின்றோம். அது புலம்புதல் மிகுந்த மலருலக வாழ்க்கை. இரண்டாங் காட்சியில், அடியார்மேல் அன்பு பூண்ட எறிபத்தர், சீறி எழுந்த யானையை எறிகின்றமையைக் காண்கின்றோம். அது சீற்றமிக்க எரியுலக வாழ்க்கை. மூன்றாங் காட்சியில், யானைமேல் அன்புகொண்ட அரசனது படை, திரண்டு வருகின்றமையைக் காண்கின்றோம். இது சீற்றம் மிகுந்த படையுலக வாழ்க்கை. நான்காம் காட்சியில் எறிபத்தரும், புகழ்ச்சோழரும், ஒருவர்க்கொருவர் பரிந்து, உயிரிழக்க முந்துவதைக் காண்கின்றோம். அது சீற்றம் தணிந்திரங்கி நிற்கும் அருளுலக வாழ்க்கை. ஐந்தாங் காட்சியில் எல்லாரும் உயிர் பெற்றுப் பொலிந்த இன்பவடிவாய் விளங்கி அன்பாய் வாழும் உயர் நிலையைக் காண்கின்றோம். ஈது திருவருள் உலக அன்பு வாழ்க்கை. இவற்றிலே ஒன்றிற்கு ஒன்று என்ன வேற்றுமை? ஐந்தாம் நிலையில் நாம் காணும் அன்பின் உயர் நிலையை என் என்பது? தெளிவே வடிவானநிலை; இன்பமே வடிவான நிலை; எப்பொருள் மேலும் வெறுப்பிலா நிலை; எவற்றையும் விரும்பிப் பேணும் நிலை; இறப்பதன்றி என்றும் வாழும் நிலை; ஈதே அவ்வுயர் நிலை. நான்காம் காட்சியில், எறிபத்தர் துன்பமேமீக்கூர நிற்றலையும்; புகழ்ச்சோழர் தம்மை யிழக்க முந்தும்போது இன்பமடைதலையுங், காண்

கிறோம். இன்ப அன்பு புகழ்ச் சோழனாரளவில் சிறிது மிகு கின்றமை காண்கிறோம். ஆனால், உடனே அவரும் துன்பத் தின் வாய்ப்படுகின்றார். இன்ப அன்பை முற்றும் பெற்றில ராதலின், திருவருள் மொழியே, வந்து வழிகாட்டுகின்றது. இவ்விருவர் அன்பும் படிப்படியாக மாறிமாறி உயர்நிலையடை வதனை முன்னரே குறித்து வைத்தோம். முன்னைய மூன்று காட்சியிலே வரும் அன்பு நிலைகளிலும் என்ன மாறுபாடு! என்னமாறுபாடு!! பூவினை இழந்து புலம்புநிலை யடைகின்றார் சிவகாமியாண்டார். களிற்றினை இழந்து சீற்றநிலை யடைகின்றார் புகழ்ச்சோழர்.

சீற்றத்திலும் சிறப்பு நிலைகள்:—சீற்ற நிலையிலும் வேறு பாடு காட்டுகின்றார் அன்றோ சேக்கிழார் பெருமான்? எறி பத்தர் சினந்து யானையை வெட்டிய சீற்ற நிலையும், அன்பி னால் எழுகின்றதொன்றே. யானை இறந்தது கேட்டுப் படை யெடுத்து வந்த புகழ்ச்சோழனாரது சீற்ற நிலையும், அன்பினால் எழுகின்றதொன்றே. புகழ்ச்சோழனாரது சீற்றமோ பெரும் பொருள்பற்றி எழுகின்றது; எனினும், அஃது இமைப் போதில் அடங்கிநிற்கிறது; அளவறிந்து, இடமறிந்து, போத றிந்து, ஆளறிந்து விளங்குகின்றது. சோழனார் சொல்லிய படி அச்சீற்றம் ஆடும். சீற்றமே வடிவாய் எழுகின்ற சோழர், சீற்றத்திற்கு அடிமை யல்லர். சீற்றமே அவருக்கடிமை. அறிவின் கண்ணை மூடுகின்றதில்லை அச்சீற்றம். அச்சீற்றம் கொண்டபோதும் அடியவர் திறத்தை மறவாது போற்று கின்றார் சோழனார். இதனைச் சீற்றநிலை என்று சொல்லலாமே யன்றிச் சினநிலை, வெகுட்சிநிலை என்று சொல்லுதற்கில்லை. இராம கிருஷ்ணர் கூறியுள்ள புனைந்துரை யொன்று புகழ்ச்

சோழரது நிலையை விளக்குகின்றது. "பாம்பொன்று பலரை யும் கடித்து வந்தது. அதன் அருகே எவரும் வாராது ஓடினர். அறவண அடிகள் ஒருவர் அதனைக் கண்டு, அவ் வாறு செய்வது தவறென அப்பாம்பிற்கு உறுதிமொழி கூறிச்சென்றனர். அன்று தொட்டு, அப்பாம்பு எவரையும் கடியாது வாழ்ந்து வந்தது. கடியாதிருத்தலைக் கண்ட சிறு வர், அதன்மேல் கல்லெறியத் தொடங்கினர். கல்லெறி யுண்டு வாடி வதங்கிய அப்பாம்பை, அவ்வறவணவடிகள் மறுமுறை கண்டபோது, அப்பாம்பு, அவரது உறுதிமொழி கேட்டே, அவ்வாறு துன்புறுவதாக முறையிட்டது அப் பெரியார் அதன்மேல் அன்புடையாராகி, 'யான் கடிக்க வேண்டா என்றேனே அன்றிச் சீறவேண்டா என்று கூறிய தில்லையே' என்றெடுத்துக் காட்டினர். பின்னர் அப்பாம்பு சீறத் தொடங்கியது. சிறுவரும் பெரியரும் ஓடி ஒளிந்தனர். அப்பாம்பு சீறித் தன்னுயிரையும் காப்பாற்றிக்கொண்டு, கடி யாது பிறருயிரையும் காப்பாற்றியதாம்." இப்புனைந்துரையிற் கூறியபடி புகழ்ச்சோழனார் சீறுகின்றாரேயன்றிச் சினந்தெரி கின்றார் இல்லை. அதனாலன்றோ, இச்சீற்றம், இனம் என்னும் ஏமப்புணையைச் சுடாது விடுகின்றது. எறிபத்தரது சீற்றம், யானையையும் மாவெட்டிகளையும் வீழ்த்தி, அரசன் வரையும் சென்று பற்றி யெரிகின்றதன்றோ? இவ்வேற்றுமை ஒன்றை மட்டுமா காட்டுகின்றார் சேக்கிழார்? சோழனாரது அருகி ருந்த மாவெட்டிகள், யானைக்கொலையைத் தீங்கெனப் பழித் துச் சினந்து கூறுதலையும், சோழனார், அதனை, வென்றி என உயர்த்திச் சீறுதலையும், முன்னரே கண்டோமன்றோ? ஒவ் வொன்றையும், இவ்வாறு, தனிச் சிறப்பு நிலைபெறப் புனைந் துரைக்கும் பெருமை பெற்றாரே திருவருட்புலவர் ஆவர்.

பல வேறு வழிபாடு:—சிவகாமியாண்டார், எறிபத்தர், சோழனார் என்ற மூவரது மனநிலைக்கேற்ப, அவர்களது வழிபாடும் வேறுபடுவதைச் சேக்கிழார் சுட்டுகின்றார். சிவகாமியாண்டார் இறைவனை எப்படி வழிபட்டார் என்பதனை முன்னரே கண்டோம். எறிபத்தர், மறநிலையில் நின்றருளிய முன்னிலையில், இறைவனை எண்ணும்போதெல்லாம், இறைவனது மறநிலையே அவரது நினைவிற்கு வருகிறது. பாம்பணிந்த கோலமும் (பன்னகாபரணர் - பாட்டு 40) யானையைக் கொன்ற கோலமுமே (மன்றவாடியார்க் கென்றும் வழிப்பகைகளிறே யன்றே) அவர் நினைவிற்கு வருகின்றன. இன்பக் கூத்தாடும் மன்றினை நினைக்கும் போதும், களிறுரித்துப் போர்த்த கடுஞ் சினக்கூத்தே நினைவிற்கு வருதல் காண்க. புகழ்ச் சோழனார் இன்ப மலர்மாலை சூடியிருப்பதற்கேற்ப, இறைவனது இன்பவடிவையே எண்ணிப் போற்றுகின்றார்; "மன்றுள் என்றும் நிருத்தமே பயிலும் வெள்ளிக் குன்றவர் அடியவர்" என்று எறிபத்தரை யானையருகே கண்டபோது, இன்பமன்றகத்தும் இன்பக் குன்றகத்தும் இன்பவடிவாம் அம்மையோடிருக்கும் இறைவனோடுசேர்த்தே காண்கிறார்; எறிபத்தரே யானையைக் கொன்றார் என அறிந்தபோதும், இசைவடிவாம் குழையணிந்த இறைவனோடும் இணைத்தே எறிபத்தரைக் கண்டு, 'இன்பத்திற்கெதிர் நிலையாக நின்று தவறிழையார்', எனத் துணிவு கொள்கிறார்.

முன்னிலையும் பின்னிலையும்:—எறிபத்தர் சினந்ததைக் கண்டு, "நகைமுகங்கொண்டு இன்பக் கூத்தாடும்இறைவனது அடியார் எரிமுகங்கொள்வதோ" என்றே புகழ்ச்சோழனார் வருந்துகிறார். "அம்பலவாணர் அன்பர் இத்தனை முனியக் கெட்டேன்" என்று வயிறுபிடிக்கிறார்; முடிவில் யானைமேல்

ஏறித் திருக்கோயில் புகும்போதும், கூத்தரசின் இன்பவடி வாய் நீள எடுத்த திருவடியை எண்ணிக்கொண்டே இன்ப வடிவாகின்றார்.

"பொன்னெடும் பொதுவிலாட னீடியபுனிதர் பொற்றாள்
சென்னியிற் கொண்டு சென்னி திருவருள் கோயில் புக்கான்."

எனவே, சோழனார் இன்பவடிவாம் கூத்தரசையே எண்ணி வாழ்கின்றார். எறிபத்தர் மனமாறிய போது, அவரும் அக்கூத்தரசினை எண்ணிப் போகின்றார் எனச் சுட்டிக் காட்டும் சேக்கிழாரது பாவின் நுட்பத்தை என் என்பது? "அம்பல நிறைந்தார் தொண்டர் அறிவதற் கரியார் என்று செம்பியன் பெருமை உன்னித் திருப்பணி நோக்கிச் சென்றார்." 'நோக்கி' என்பதனால் கூத்தரசின் இன்பக் கூத்திற் கேற்றதோர் திருப்பணியையே இவர் நாடுவாராயினமை விளங்கவில்லையா? யானையுரியையும் பாம்பையும் மறந்து, இன்பக் கூத்தையே எண்ணுகின்றார் எறிபத்தர்; மறநிலையை மறந்து அறநிலையாம் இன்ப நிலையிலேயே நிற்கின்றார். சிவகாமியாண்டாரோ மறநிலையையும் அறநிலையையும் ஒருங்கு புகழ்ந்தமை கண்டோம். "களியானையின் ஈருரியாய்," "புரம் வெந்தவியச் சிறும் சிலையாய்," "மறலிக் கிறைநீள் செஞ் சேவடியாய்" என்று மறநிலையையும் போற்றுகின்றார்; "அடியார் அறிவே". "தெளிவார் அமுதே" என்று அறநிலையாம் இன்ப நிலையையும் போற்றுகின்றார். இவ்வாறு இவர்கள் பலவேறு நிலையில் நின்றும், ஓர் இறைவனையே பலவாறு வழிபடுதல் காண்க.

அன்பு நிலைகள்:—அவ்வழிபாட்டிற் கேற்ப, அவர்கள் அன்பு நிலையும் வேறுபடுகின்றது. சிவகாமியாண்டார் அன்

போ ஒரு வடிவினது; புகழ்ச்சோழர் அன்போ மற்ருெரு வடிவினது; எறிபத்தர் அன்போ வேருெரு வடிவினது. அம்மட்டுமா? எறிபத்தர் அன்பும், முன்னிலை யன்பு, பின்னிலை யன்பு என வேறுபட்டு அன்ருே விளங்குகின்றது. எறிபத்தரது அன்பின் வளர்ச்சியே இப்புனைந்துரை என இதுவரையும் கூறி வந்துள்ளோம். ஈது உண்மையோ என்றன்ருே முன்னுரையில் இவ்வாராய்ச்சியைத் தொடங்கினேம்.

ஐயமும் தெளிவும்:—"இனைய வன்பெருந் தொண்டே மேலும் செய்து செல்கிருர் எறிபத்தர்" எனச் சேக்கிழார் கூறுகின்ருரன்ருே. 'ஆளுடைத் தொண்டர்செய்த ஆண்மை' என்று மேலும், அஞ்சாது அவர் யானையைத் தாக்கியதை யன்ருே, சேக்கிழார், புகழ்கின்ருர். அவ்வாருனல், எறிபத்தர் மன்மாற்றமடைந்து உயர்நிலை பெறுவதை அவர், எங்குச் சுட்டுகின்ருர்? இவ்வாறெல்லாம் எண்ணங்கள் எழுவதும் இயல்பே. எனினும், இதுவரையும் கூறிவந்த புனைந்துரையே, அம்மனமாற்றத்தைச் சுட்டவில்லையோ என ஊன்றிப் பார்த்தல் வேண்டும். திருவள்ளுவனர், தீங்குசெய்தாரை ஒறுத்தல், பொறுத்தல், தீங்கை மறத்தல், தீயோர்க்கு அவர் நாண நன்னயஞ் செய்தல், என நான்கு நெறிகளை ஒழுக்க ஏணியிலே படிப்படியாக உயர்ந்திருக்கும் பழுக்களாகக் கூறிச் செல்கின்ருர். ஒறுத்தல் நெறி, பொறுத்தல் நெறி, மறத்தல் நெறி, நன்னய நெறி என்ற இந்நெறிகளில் எறிபத்தர், இப்புனைந்துரையில் படிப்படியாக உயர்கின்ருர் அன்ருே. முதல்நிலையில் வேழத்தை ஒறுத்தும், வேந்தனை வெறுத்தும் நின்ற எறிபத்தர், பின்னிலையில் வேந்தனை வணங்கி வேழத்தின் மேல் அன்புபூண்டு அதனை அரசனேடு உலவிவர விழைகின்ருர். ஆதலின், திருவள்ளுவர் கொள்

கைப்படி எறிபத்தர் ஒறுத்தல் நெறியினின்றும் நன்னய நெறியாம் இன்ப அன்பு நெறியிற் புகுகின்றார் அன்றோ? சேக்கிழார்க்கும் இஃதே கருத்தாயின் 'வன்றொண்டு' என்றும், "ஆண்மை" என்றும், புகழ்வது எறிபத்தரது பின்னிலையையேயாகும். 'ஆளுடைத்தொண்டர் செய்த ஆண்மை' என்ற பாட்டில், புகழ்ச்சோழரும், எறிபத்தரும், ஒருவரின் ஒருவர் திமிறிக்கொண்டு இறக்க முற்படும் காட்சியையே சேக்கிழார் உயர்த்திப் பாடுகின்றார். தம்முயிரைத் தம் கையால் மாய்த்துக்கொள்ளப் புகுந்து கழுத்தை அரியும் எறிபத்தர் ஆண்மை யன்றோ ஆண்மை! புகழ்ச் சோழர் கையினின்றும் வாளைத் தாம் வாங்காதிருந்தால், அச்சோழர் தம்மைத்தாமே வெட்டிக்கொள்வர் என அஞ்சி, அவருயிரைக் காக்கத் தம்முயிரைத்தர முந்திய அன்பு நிலையன்றோ உயரிய அன்புநிலை. யானையை வெட்டியதினும் இவ்வாண்மை சிறந்ததன்றோ? தம்மையும் இழக்க முந்திய இத்தொண்டன்றோ எதனினும் பெருவலியதாவது? ஆதலின், ஆண்மை என்றும் வன்றொண்டென்றும் இதனையே சேக்கிழார் புகழ்கிறார் என்க. "ஆண்மை" என்பதால் வேழ வென்றியையே குறிக்கின்றாரானால், அவ்வடியார் தம்மைத் தாமே கொல்ல முன்வந்த தனிப் பெருந்தகைமையை அப்பாட்டில் சேக்கிழார் குறிக்கவில்லை எனல்வேண்டும். இப்பெரியாரது பாடலுக்குக் குன்றக் கூறல் என்ற குற்றம் சாட்டவேண்டும். நாவலர் பெருமானும் புகழ்ந்து கூறும் இவ்வுயிர் நிலையைச் சேக்கிழார் பெருமான் சுட்டாது விடுவாரா?

நம்பியாண்டார் நம்பியின் எறிபத்தர்:—சேக்கிழார், எறிபத்தரது வரலாற்றைக் கூறிச் செல்லும் போக்கினை, ஊன்றிப்

பார்ப்போமானால், யானையைக் கொன்றமையை முடிவு நிலையாக, அப்புலவர் பெருமான் கொள்ளவில்லை, என்பது புலனாகிறது. மலர் பறித்த யானையையும், மாவெட்டிகளையும், வெட்டினார் என எறிபத்தர் வரலாற்றை

"ஊர்மதின் மூன்றட்ட வுத்தமற் கென்றே ருயர்தவத்தோன்
தார்மலர் கொய்யா வருபவன் தண்டின் மலர்பறித்த
ஊர்மலை மேற்கொள்ளும் பாக ருடல்துணி யாக்குமவன்
ஏர்மதி மாமதில் சூழ்கரு வூரில் எறிபத்தனே."

என்ற பாட்டால் கூறி, புகழ்ச் சோழர், தாமும் தம்மைக் கொல்ல வாளை நீட்டிய வரலாற்றை,

"புலமன்னிய மன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன் னியபுகழ்க் கோகன நாதன் குலமுதலோன்
நலமன் னியபுகழ்ச் சோழன தென்பர் நகுசுடர்வாள்
வலமன் னியஎறி பத்தனுக் கீந்ததோர் வண்புகழே."

என்ற பாட்டால் பின்னே பாடுகின்றார், நம்பியாண்டார் நம்பி. சேக்கிழாரோ இவ்விரண்டு வரலாற்றையும் ஒன்று சேர்த்து இப்புனைந்துரையாகப் பாடுகின்றார்.

எறிபத்தரது புது வரலாறு:—யானையை யெறிதலே முடிந்த முடிபாகிய சிவப்பெருந் தொண்டானால், எவ்வெவரும் உளங்கொள அதனை வேறு வகையிற் கூறியிருக்கலாம் அன்றோ! கொலை யென்று அஞ்சி நடுங்காதவாறு பாடுதலைச் சேக்கிழார் அறியாரோ? கீழ் வருமாறும் பாடலாம் அன்றோ? "சிவகாமியாண்டார் முதுமையிலே தள்ளாடி நடக்கின்றார்; யானை விரைந்து வருகின்றது. பூங்குடலையைப் பறிக்கின்ற வன்மையால் அவரையும் இழுக்கின்றது. யானைக் காலில் மிதிபட நிற்கும் அந்நிலையில், எதிரே வருகின்ற

எறிபத்தர், ஓரே பாய்ச்சலாகப் பாய்ந்து, யானையின் தும்பிக் கையை வெட்ட வரும்போது, தம்மை எதிர்த்த மாவெட்டி களையும் குத்துக் கோலாளரையும் தும்பிக்கையோடு ஓரே வீச்சில் வெட்டிக் குவித்துச் சிவகாமியாண்டாரைக் காப் பாற்றுகின்றார்.'' இவ்வாறு, நம்பியாண்டார் நம்பிகளது பாடலுக்கு உரை கூறுதல் கூடும்.

தடுத்தல் நெறியும் ஒறுத்தல் நெறியும்:—பிறர் உயிரைக் காப்பது தற்காப்பினும் சிறந்ததன்றோ? தற்காத்து நிற்கை யிலே பிறர்க்குத் துன்பம் நேரிடின் அதனைப் பழிப்பவர் இல்லை. தம் பொருளைக் காக்கும் பொருட்காப்பும் தற்காப் பேயாம். காத்துத் தடுக்கக் கூடிய நிலையில்தான் பிறர்க்குத் துன்பமூட்டுதல் அறமாகும். என் பேழையைக் கள்வனொரு வன் உடைக்கும்போது, என் வலியால் அவனைத் தடுத்தல் அறமேயாகும். அவன் துன்புறுகின்றானே என என்னைப் பழிப்பவர் இல்லை. இதனைத்தான் ஆறுமுக நாவலர் எடுத் துக் காட்டும் சங்கற்ப நிராகரணம் விளக்குகின்றது. திரு டன் திருடிக்கொண்டு போய் விற்றபின், அவனை நான் வருத் துதல் அறமாகாது. அந்நிலையில் எதனை நான் தடுக்கின் றேன்? எதனை நான் காக்கின்றேன்? பாடிகாவலாளரிடம் சென்று முறையிட்டு மன்றுடுதலே வழக்காகும். காக்கும் காலம் போயது. ஒறுத்திடும் காலம் வந்தது. தடுப்பது என் தொழில். ஒறுப்பது அரசன் தொழில். தம்மைப்பிறர் எதிர்த்த போது தற்காப்பும் பொருட்காப்பும் வேண்டிக் குடிகள், எதிர்த் தவர்களைக் கொல்லுதல் கொலையாகாது. ஏன்? அவர் எண் ணியது தற்காப்பே யன்றிப் பிறர் கொலையன்று. குடிகளுக் கேற்றது தடுத்தல் நெறி; அரசனுக்கேற்றது ஒறுத்தல் நெறி. குடிகளே, ஒறுத்தல் நெறியைக் கைப்பற்றின் நாடெலாம்

போர் முழங்கும். ஆதலின், அரசனது ஒறுத்த னெறியைப் புகழ்வோர், குடிகளது ஒறுத்தனெறியைப் பழிப்பர். இஃது உண்மையானல் எறிபத்தர் ஒறுத்தனெறியைப் பின்பற்றியது எங்ஙனம் உயர்நிலையாகும்? தடுத்தல் நெறியில் எறிபத்தரைப் புகுவித்துப் பாடச் சேக்கிழார் அறியாரோ? யாமறிந்த இவ் வரலாற்றுப் போக்கை, அருண்மொழிப் புலவர் அறியார்என எண்ணுதல் அறியாமையே யன்றோ? செங்கோன் முறை யனைத்தையும் உணர்ந்த சேக்கிழார், நம்பியாண்டார் நம்பியைப்பின்பற்றி, எறிபத்தரானவர் தடுத்தல் நெறி நின்று, யானையைக் கொன்று சிவத்தொண்டு ஆற்றுகின்றார் எனக் கூருது, ஒறுத்தல் நெறி நின்றே தொண்டாற்றுகின் றார் எனக் கூறுவதுதான் என்னே? அரசனே கொடுமை புரிந்தபோது, குடிகள், ஒறுத்தல் நெறி நிற்கலாம் என்ற அறத்திற்கு இங்கு இடம் இல்லை. எறிபத்தர், முன்னிலை யில் அவ்வாறெண்ணி யிருந்தாலும், பின்னர்ப் புகழ்ச் சோழனரை நேரிற் கண்டபோது, கொடுங்கோன் மன்னன் என அவரைக் கூறியிருப்பரோ? அவ்வகையாலும், முன் னிலையில் தாம் செய்த தீங்கினைப் பின்னிலையில் உணர்கின் றார் எனல் வேண்டும்.

நேற்றே முடிய வேண்டாவோ? அன்றியும், தடுத்தல் நெறி நிற்கின்றார் எறிபத்தர் என்றால், அஃதோடு புனைந் துரை முடிவடைகின்றதன்றோ? அஃதே முடிந்த முடிபா கும். பின்னர்ப் புனைந்துரையை விரித்துரைத்தல் மற்றொன்று விரித்தலாகும். அதுபற்றி யன்றோ பின்னைய வரலாற்றை வேறொரு புனைந்துரையாக வேறொரு பாடலில் கூறுகின்றார் நம்பியாண்டார் நம்பிகள். ஆனல், ஒறுத்தல் நெறி நிற்கின் றார் எறிபத்தர் என்று கூறினல், அதனினும் உயர்ந்ததொரு

நிலையைச் சுட்டுதல் கூடுமன்றோ? அப்போதுதான் இருவர லாற்றையும் ஒன்றாக இயைவித்துப் பாடுதல் கூடும். இது பற்றியே சேக்கிழார், தமது புனைந்துரையில், பூச்சிந்தியயானை யானது அத்தெருவைக் கடந்த பின்னரே, அதனைப் பின் தொடர்ந்து சென்று எறிபத்தர் கொல்வதாகப் பாடுகின்றார். சேக்கிழார் கூறுகின்றபடியும் நம்பியாண்டார் நம்பியின் பாடலுக்கு உரைகாண முடியும் அன்றோ?

அரசனைச் சினந்தது அறமேயோ:—நாம் காட்டியபடி, வேறு வகையில் இவ்வரலாற்றைப் புனைந்துரையாமை, எதிர்மறைச் சான்றேயாகும். உடன்பாட்டுக் குறிப்பு களையும் இப்புனைந்துரையில் காண்கின்றோம். இவ் வேழ வென்றியிலும், சில குறைபாடுகள் தோன்றவே, சேக்கிழார் பாடுகின்றார். யானை மேலும், மாவெட்டி கள் பாலும், வேந்தன்மீதும், சினம் கொள்கின்றார் எறிபத் தர். யானையினையும் மாவெட்டிகளையும் சினந்து கொன்றது அறமே எனக் கொள்வோரும், வேந்தனுக்குத் தீங்கு நினைத்த தை அறமென்று கூறமுன்வாரார். திருவள்ளுவர் கூறியபடி, இச்சினமென்னும் சேர்ந்தார்க்கொல்லி; அடியவரினமெனும் புகழ்ச்சோழனாகிய ஏமப்புணையையும் சுடுகின்றதன்றோ? எறிபத்தரே பின்னிதற்கு வருந்துகின்றார். அதற்குக் கழுவா யாக அன்றோ, தம் கழுத்தை அரிந்துகொள்ள முற்படுகின் றார். பின்னும், 'அம்பல நின்றவர் தொண்டர் அறிவதற்கரி யார்' என்று செம்பியன் பெருமையையே யுன்னி, அதற் கேற்றபடி திருந்தியமைந்த தமது திருப்பணியை உள்ளத்தே வைத்து நோக்கிச் செல்கின்றார் என்றன்றோ சேக்கிழார் கூறுகின்றார். வேந்தனைச் சீறுகின்றமை ஒரு தீங்கேயாம்.

மாவேட்டிகள் செய்த தீங்கு என்ன?:—மாவெட்டிகளைக் கொல்வதையும் ஒரு குறையாகவே சேக்கிழார் விளக்கி வைக்கின்றார். மாவெட்டிகளைக் கொல்வது எதனாலே? 'மாதங்கந் தீங்கு செய்ய வரு பரிக்காரர்தாமும் மீதங்குக் கடாவுவாரும் விலக்கிடா தொழிந்து பட்டார்' என்று எறிபத்தரே கூறுகின்றார். எறிபத்தர் அங்கு நிகழ்ந்ததை நேரிற் கண்டவரல்லர். சிவகாமியாண்டாரும், மாவெட்டிகளைப் பற்றிக் குறை கூறவில்லை. எறிபத்தர், தாமாகவே இவ்வாறு உய்த்துணர்கின்றார். எனினும், சினத்தோடெழுந்த உய்த்துணர்வாதலின், அது பிறழ்ச்சியுடையதெனச் சேக்கிழார் சுட்டுகின்றார். அங்ஙனமாயின், யாது நிகழ்கின்றதெனச் சேக்கிழார் பாடுகின்றார்? யானையானது, மாவெட்டிகள் வழி நில்லாது, அவர்களைத் தன்வழியே கொண்டு, ஒரு தெருவிலே போய் முட்டுகின்றது; சிவகாமியாண்டாரது பூங்குடலையைப் பறிக்கின்றது. காண்கின்றனர் மாவெட்டிகள்; சிவகாமியாண்டாருக்கும் பிறர்க்கும், தீங்கொன்றும் வேறு நேராதவாறு, அதனை, அப்புறம் கொண்டு செல்கின்றனர். அவ்வாறு கொண்டு செல்கின்ற அருமையை,

"மேல்கொண்ட பாகர் கண்டு விசைகொண்ட களிறு சண்டக்
கால்கொண்டு போவார் போலக் கடிதுகொண் டகலப்போக"

எனப் பாடுகின்றார் சேக்கிழார். மேலே, எறிபத்தர்மீது யானை பாயும் போதும், மாவெட்டிகள், அதனை அப்புறம் செலுத்திக்கொண்டு போக முயல்கின்றனர். அவர்களால் இயலவில்லை. என் செய்வர் அம்மாவெட்டிகள்? அடக்கியாள முடியாத ஆனையை, அடக்கியாள வந்தமையே, அவர்கள்மேல் குற்றம். திருவருளின் வழிநின்ற யானையைத்

தம்வழியே திருப்புதல், அவர்களால் ஆவதொன்றோ? மாவெட்டிகளைக் கொல்கின்றமையையும் சேக்கிழார் விரிவாகப் புனைந்துரைக்கவில்லை. அதனை இரண்டு வரியில் சுருக்கிக் கூறி விடுகின்றார்.

"வெய்யகோற் பாகர் மூவர்; மிசைகொண்டா ரிருவர்; ஆக
ஐவரைக் கொன்று நின்றார்."

எனக் கூறி முடித்து, இதனை அஞ்சிச் சேக்கிழார் ஓடுதல் காண்க.

திருவருள்யானையைச் சினந்ததும் அன்போ?—யானையைக் கொன்றதிலேனும், குற்றம் காணுதிருத்தல் கூடுமோ? தடுத்தற்கன்றி, ஒறுத்தற்கென்று, யானையைக் கொல்லுதல் முறையோ? திருவருளே இவ்வானையை, இவ்வாறு, இயக்கியதென்ற உண்மையைச்சேக்கிழார், பின்னே, புனைந்துரைக்கின்றார். திருவருள் வழிநின்ற யானையானது, எவ்வாறு பழியுடையதாகும்? அதனை ஒறுத்தல், திருவருளை ஒறுத்தலாகின்றது. இவ்வுண்மையை விளக்க அன்றோ, திருவருள் மொழி எழுகின்றது?

எறிபத்தரின் உயர்நிலை:—எனவே, வேழவென்றியானது, எறிபத்தரது உயர்நிலையைக் குறிக்கவில்லை. அது பற்றியே, அந்நிலையில் நின்ற எறிபத்தர்க்கு, மடங்கலை ஒப்புமையாகக் கொள்கின்றார் சேக்கிழார். ஆனால், அந்நிலையினும் எறிபத்தர், அன்பிற் சிறந்து விளங்குதலைக் காண்கின்றோம். அதனினும் உயரிய ஒரு கடவுளன்புநிலை யுண்டென்பதனையும், அதனை எறிபத்தர் எவ்வாறு அடைகின்றார் என்பதனையுமே சேக்கிழார் புனைந்துரைக்கின்றார். இது கருதியே, இப்புனைந்துரை அன்பின் வரலாறே யன்றி, கொலையின் வர

லாறு அன்று' என இதனை, முன்னுரையிற் புகழ்ந்தோம். அன்பின் வளர்ச்சியைச் சேக்கிழார் பெருமான் போல, உயிரோவியமாக, எழுதிக்காட்டுவோர் சிலரே! அங்ஙனமிருந்தும், இவ்வரலாற்றில், எறிபத்தரது வேழவென்றியே சிறந்ததென்பார், தம்முடைய கொலைத்திறத்தைப் புகழ்கின்றாரே யன்றிச் சேக்கிழாரைப் புகழ்கின்றார் அல்லர். அடிமையாகி நின்றோர், வாளேந்திப் போர் புரிய வலியற்றபோது, வாயிலேனும் போரைப் பற்றிப் பேச எண்ணி, 'பிறரைக் கொல்வதே பேரறம்' என வாய்ப்பேச்சுப் பேசிய பிற்காலக் கொள்கையை, உரிமை கூத்தாடிய பெரியபுராணத்திற் புகவிடுவது, பெரும் பழியாகும். இயற்கை வழியே சென்று, துன்பத்தை எல்லாம் மறந்து, சேக்கிழார் புனைந்துரைக்கும் அன்பாற்றில் யாமும் மூழ்கித் திளைக்குமாறு, இன்பவடிவாம் இறைவன், அருள் புரிவானாக.

## இணைப்பு—1.

# எறிபத்த நாயனார் புராணம்

### மழவை - மகாலிங்கையர் உரை

[பாட்டுக்கள் கட்டுரையில் வந்துள்ளன]

1. வளம் பொருந்திய நீரினைப்பெற்ற பூமியில், இளமை யாகிய ரிஷபத்தை வாகனமாகவுடைய சுவாமியினிடத்தில், அன்பு வைத்தவர்களுக்கு, ஆபத்து வந்தபோது, சீக்கிரத்தில் வந்து, அதை நீக்குவதற்குத் தக்க செய்கையைச் செய்கின்ற குணத்தை யுடையவராய், அளவற்ற புகழினை அடைந்து சிறந்த எறிபத்த நாயனரது பெருமையானது, நம்மாற் சொல்லப்படுந் தன்மையை உடையதல்லதா யிருந்தாலும், எனக்குள்ள ஆசையாற் சொல்லத் தொடங்கினேன்.

2. மகாமேரு கிரியில் தன்னுடைய புலிக்கொடியானது நின்று பிரகாசிக்கப் புதியனவாக எழுந்துள்ள மலைகளை இடித்து நிரவி, அங்ஙனம் நிரவப்பட்ட இடமே நடப்போர்க்கு நேர் வழி யாகச் செய்து, முன்னிருந்த சுற்று வழியை யடைத்த சோழன் - புகழால் நிலைபெற்ற அனபாயச் சோழன் - இவர்களுடைய சிறந்த வமிசத்தார்க்குப் பெருமையுற்ற நகரமாயிருக்கின்றது, வெகு நாளா யிருக்கின்ற கருவூரென்று சொல்லப்பட்ட பிரகாசம் பொருந்திய மணிகள் பிரகாசிக்கின்ற வீதியினையுடைய ஊர்.

3. தேவர்கள், களிப்புற்று நிறைந்து வாசஞ்செய்யுந் தேவேந்திரனுடைய அமராவதி நகரமும், தாழ்வை யடையும்படி யாகப் பெரிதாயிருக்கின்ற மதிலை, மேகங்கள் சூழ்ந்துகொண்டி ருக்கும்; பந்தியாயிருக்கின்ற வீடுகள் ஆகாயத்தை அளாவி யிருக் கும்; வாசல்களில் தோஷமில்லாத ரத்நமாலைகள் தொங்கவிடப்

பட்டிருக்கும்; சோலைகளில் புட்பங்களால் வாசனையுண்டாயிருக்கும்; தேன் பொருந்திய மலர்கள் கூந்தலிற் சூழ்ந்திருக்கும்; சிலஸ்திரீகளுடைய முகமாகிய சந்திரர்கள் தெருவிற் பிரகாசிக்கும்.

4. மதத்தையுடைய யானைகள் நீர்த்துறையில் விளையாடும்; சந்தோஷத்தையுடைய மயில்கள் முல்லை நிலத்தில் ஆடிக்கொண்டிருக்கும்; முத்து முதலான மணிகள் நெருக்கமாகப் பதிப்பிக்கப்பட்ட சபையில் நடனஞ் செய்கின்ற மாதர்கள் கூந்தலில் வண்டுகள் முழங்கும்; மிகுந்த பிரகாசம் வீதியில் தோன்றக் கட்டப்பட்ட கொடிகள் சூரியன்மேல் உராய்ந்து ஆடும்; விசாலமாகிய நீண்ட பூலோகத்தார் கொண்டாடும் ஒப்பற்ற அந்த நகரத்தின் வளமானது இத்தன்மையதாயிருக்கின்றது.

5. நிலைபெற்ற சிறப்பினாற் பெருமை யடைந்து வளம் பொருந்திய அந்த நகரத்தில், தேவர்களும் கூட்டமாக வந்து பொன் மயமாகிய மதிலைவலஞ்செய்து தொழத்தக்க மகிமையினையுடைத்தாய்க் களங்கமின்றிக் கலந்த அன்பிற் சிறந்த தொண்டருடைய மனதில் இடைவிடாமல் வீற்றிருக்கும் அத்தன்மையினையுடைய பரமசிவன் எழுந்தருளி யிருக்கிறதற்கு இடமாயுள்ளது யாதெனின், ஆநிலை யென்னுங் கோயிலாம். (கருவூரில் இருக்கும் சிவன் கோயிலுக்கு ஆநிலை என்று பேர்.)

6. சகல விஷயங்களும் அடங்கியிருக்கின்ற வேதங்களாலும் அளவிடுதற்கரிய பரமசிவனை, இனிமை பொருந்திய அந்த ஆலயத்தில், மயக்க வழியை நீக்குகின்ற ஆகமத்திற் சொல்லியிருக்கிற விதிப்பிரகாரம்,வழிபடுகின்ற செய்கையையுடையவராகி, இருள்போல் கரிய நிறத்தையுடைய விஷமானது அடங்கியிருக்கின்ற கழுத்தையுடைய சுவாமிக்கு,அடிமைத்தொழில் செய்ய உரியவராகிய பக்தர்களுக்குப் பெரிய தொண்டு செய்கின்றவர் யாவரெனின், எறிபத்த நாயனர் என்று சொல்லப்பட்டவராம்.

7. செழுமை பொருந்திய உலகத்தி லெல்லாவிடத்திலும் நிலைபெற்ற சைவ சமயாமானது விருத்தியாக, நெருப்பின் நிறம்

போல் விளங்குகின்ற சடையினேயுடைய பரமசிவனடியார்களுக்கு ஆபத்து வந்த காலத்தில், குகையில் நின்று புறப்படுஞ் சிங்கம் போலத் தோன்றி,, ஆபத்துக்குக் காரணமாயிருந்தவர்கள் பலம் அழியவெட்டி ரக்ஷிக்கின்ற - பழமையாகிய வேதங்களால் துதிக்கப்பட்ட மகிமை பொருந்திய சுவாமியினுடைய மழுவாயுதம் போன்ற - மழுவைத் தாம் கையில் தரித்துக்கொள்ளப்பெற்றவர். (பரசு என்பது உருபும் பொருளுமுடன் தொக்கதொகை.)

8. எறிபத்தநாயனுர் இவ்வாறு இருக்குங்காலத்தில், ஆநிலையென்னும் கோயிலில் வீற்றிருக்கின்ற சுவாமிக்கு உறுதியான அன்புபெற்ற சிவகாமியாண்டா ரென்கிற பெயர்பெற்ற புண்ணியமுள்ள ஓர் பெரியவர், புட்பங்களைக்கொய்து இவைகளால் கட்டப்பட்ட மாலைகளைச் சாத்தி, நிறைந்த பக்தியோடு நடக்கின்றவர்; ஒரு நாளில்முன் தாம் நடந்தது போல,

9. விடியற்காலத்தில் நித்திரைதெளிந்து,ஆற்றிற்குப்போய் நீரில் முழுகி, வாயை வஸ்திரங்கொண்டு கட்டி,மண நிறைந்துள்ள மலர்கள் மிகுந்திருக்கின்ற நந்தனவனத்திற் போய் ஆராய்ந்து, மணக்கின்ற நல்ல அரும்புகள் மலரும்போது, தெய்வங்களுக்கெல்லாம் நாயகராயிருக்கின்ற பரமசிவனுக்குச் சாத்துவதற்கு யோக்கியமான பூக்களைப்பறித்து,-(உம்மை அசை; எச்சவும்மையாக்குவாருமுளர்.)

10. அழகாகிய பூங்கூடையைப் புஷ்பங்களால் நிரப்பிக்கொண்டு, இருதயத்தில் பரிசுத்தமாகிய அன்புபெற்று, மலர் போன்ற கையினிடமாகத்தண்டு ஏந்தி,அந்தச்சிவாலயத்தை நோக்கிச் சுவாமிக்கு மாலைசெய்து சாத்த வேண்டிய காலத்தில், தாம் போய் உதவும்படியாக, விரும்பிச் சீக்கிரத்தில் வந்துகொண்டிருந்தார்.

11. அத்தன்மையையுள்ள சிவகாமியாண்டார் வரும்போது, இப்பால், வளம்பொருந்திய அந்தப் பட்டணத்தில், நிலைபெற்ற அரசர்களாகிய சோழராஜாக்கள் மரபில் தோன்றிய புகழ்ச்சோழ

ருக்குரியதாய்ச் சத்துருக்களுடைய முன்னணிச் சேனையை நாசஞ் செய்கின்ற பட்டவர்த்தனமெனப் பெயர் அடைந்து பெருமை பொருந்திய வெவ்விய யானையானது, திருவிழா நடக்கின்ற மகா நவமியின் முதல் நாளில்,—

12. காவேரித் துறையில் நீராடி, மங்களகரமான அலங்காரத்தைப்பெற்று மிகுந்த களிப்போடு மதங்கள் சொரிய, எதிரே வாரா நின்றவர்கள் நாற்புறத்திலும் விலகிப்போக, யானைக்கு முன் குத்துக்கோற்காரர் ஓட, உயர்ந்த பெருமை பொருந்திய மலைபோலக் காணப்பட்டு விரைவாக வந்து,—(பரிக்காரராவது யானைக்கு முன்பாகப் போய்க்கொண்டு,அதன் வருகையை எதிரே வருகின்ற மனிதர்க்குத் தெரிவித்து விலகும்படி செய்து, அது மாறுபடுங் காலத்தில் அடக்கும்பொருட்டு ஈட்டியைக் கையில் வைத்துக்கொண்டிருப்பவர்களாம். பரித்தல் - தாங்குதல். காரர்- செய்பவர். எனவே ஆயுதத்தைத் தரித்திருக்கிறவர்களெனப் பொருள் பெற்றும்: பரிக்காரர் என்பது குதிரையில் ஏறிச்செல்வோரெனினும் பொருந்தும்.)

13. வெற்றி பொருந்திய மதங்கொண்ட அந்த யானையானது,தன் மேலேறிக் கொண்டிருக்கின்ற பாகரோடும் போய், ஒரு வீதியில் விரைவாகச்சென்று,தனக்கு முன்னே சிவகாமியாண்டார் போய்க்கொண்டிருக்கக் கண்டு, அவர் பின்னே தொடர்ந்தோடி, அவர் கையில் தாங்கிய வன்மையாகிய ஒப்பற்றகோலில் தொங்கிக் கொண்டிருக்கும் புஷ்பக்குடலையைப் பிடித்துப் பறித்துச் சிதறின அளவில்,—

14. ஏறியிருக்கின்ற பாகர்கள், அந்தச் செய்கையைப் பார்த்து,விசைகொண்ட யானையைச் சண்டமாருதத்தாற் கொண்டு போகப் பட்டவர்களைப்போல், தங்களை விரைவித்து கொண்டு போகும்படி முடுக்க, பூணூல்தரித்த மார்பினையுடைய சிவகாமி யாண்டார், அதைப் பார்த்துப்பதைத்துக் கோபித்து மதங்கொண்ட

யானையின் பின்னே சென்று, அதைத் தண்டத்தைக்கொண்டு அடிக்கப்போனார்.

**15.** அப்போது, சிவகாமியாண்டார், எட்டாதிருக்கும்படியான விசையில் வலிமைபொருந்திய யானையானது தொலைந்து போக, பெருமைபொருந்திய உண்மையான தொண்டரானவர்' மூப்புப் பருவத்தால் சீக்கிரமாக யானையின்பின் தொடர்ந்தோடுவதற்குச் சக்தியில்லாதவராய்த் தவறிவிழுந்து, தமதுகைகளைத் தரையில் மோதியடித்து எழுந்திருந்து நின்று, சொல்லுதற்குக் கூடாத்துக்கம் அதிகப்பட்டுக் கோபித்து, முன்பாகச் சிவதாவென்னுமொழியைச் சொன்னார். (சிவதா என்பது நன்மையைச் செய்கின்றவனேயெனப் பொருள் கொடுக்கும் வடமொழியாம். அது இங்கே சுவாமியைக் குறித்து இடு முறைப்பாட்டில் வந்தது; அவர் ஆபத்துவேளையில் அடியார்களைக்காப்பாற்றுகிறவராதலால்.)

**16.** "செருக்கடைந்த யானையினிடத்தில் நின்றும் உரித்த் தோலினை தரித்த சுவாமீ, அடியேனுக்கு நன்மயருள் செய்யும். எளியவர்களை வலியர்களாகும்படி செய்கின்ற ஆண்டவரே, உதவியருளும். அன்பினையுடைய அடியாரது அறிவாக நின்றவரே, சகாயஞ் செய்தருளும். தெளிவாகிய நிறைந்த அம்ர்தம் போன்றவரே, காப்பாற்றி யருளும். (கர்மமே பிர்மம் எனச் செருக்குற்ற தாருகாவனத்து ரிஷிகள், சுவாமியைக் கொல்லுவதற்காக, யாகமொன்று செய்து,அதனில் நின்றும் ஓர் யானையை எழுப்பியனுப்ப, அதைக்கொன்று தோலினையுரித்துப் போர்த்துக் கொண்டாராதலின், கஜத்தினது சருமம், போர்வையாகக் கொள்ளப்பட்டது. யானையினீருரியாய் என்றார், யானைக்கு நீர் வைரியாதலால், இந்த யானைக்கும் நீர் அங்ஙனம் ஆகவேண்டுமென்னுங் கருத்துள்ளவர் என்பது தோற்றுதற்கு. சிவதாவென்பது இவ்விடத்திற் குறிப்பு வினைமுற்று.)

**17.** "கங்காநதியையும் சந்திரனையுந் தரித்தசடையின் மேல், அர்ச்சிக்கிறதற்குத் தகுதியாகிய புஷ்பங்களை, யானை சிந்தக்

கூடுமோ? வேதாகம விருத்தமான கொடுஞ் செய்கைகளை மன தில் நினைத்த அசுரர்களுடைய முப்புரங்களும் நீறாக வெந்தழி தற்குச் காரணமாகப் பிடித்த மகாமேருவாகிய வில்லையுடையவரே அனுக்கிரகஞ் செய்தருளும். (முப்புரங்களும் வெந்தழிகிற தற்குச் சுவாமியினது நகையே அன்றி, வில் முதலானவை காரண மாகாமற் போயினும், முதலில் அவைகளையே எதுவாக எண் ணிப் போர்க்கோலங்கொண்டாராதலின், சிலைக்குச் சிறப்புண் டாகக் கூறினார். இதனால் மகாமேருவும் வணங்கி வசப்பட்டிருக் கும் உமக்கு, இந்த யானையோ ஒரு பொருட்டாக நிற்கும் என்பது தோன்றிற்று.)

18. "தஞ்சமென்று உம்மை அபயஸ்தானமாக எண்ணி அடைந்த எளியவராகிய மார்க்கண்டேயருடைய நெஞ்சத் திலுள்ள துக்கங்கெட, எதிராகத்தொடர்ந்து ஓர் மேகம்போன்று நெருங்கிவந்த யமனுக்காக, சிறிதளவு நீண்ட அழகிய சிவந்த திருவடியையுடையவரே, அனுக்கிரகஞ் செய்தருளும். (வீழ் என்பதை அகரங் குறைந்துநின்ற செயவெனெச்சமாக்கி, மேகம் போல்வீழ, என்று பொருள் கூறினும் பொருந்தும். செம்மை அழ கில் நின்றது. இறை நீளுதல் - மெல்ல உதைத்தல். அதனாலே யே எமன் மாய்தலால் சுவாமியின் வலியானது ஒப்பற்றதென்று குறிப்பிக்கப்பட்டுள்ளது: நமனை மாய்க்கிறதற்கு மனதில்ஒருப்பட்டு உதைக்க இல்லையென்பது தோன்ற நீள், என்று திருவடியின் தொழிலாக்கினார்.)

19. "விஷ்ணுவினாலும் அறியக்கூடாத சிவானுபவ மார்க் கத்தை, மிகவும் அறிந்தடையும்படியாக, அடிமைத்தனத்தை வகித்து, திருவூழியஞ் செய்கின்ற அடியார்களின் சிவபக்தருடைய வகையில், என்னை எதிற்சேர்ந்தவனாக நினைத்துவந்தனுக்கிரகம் பண்ணுவர், என்றும் அழிவில்லாத முதல்வராகிய பரமசிவனார்" என்று சொல்ல,—

20. இவ்வகையாகச் சிவகாமியாண்டார் முறையிட்டுச் சொன்ன வார்த்தையை, எதிரே வாராநின்ற எறிபத்தநாயனார் கேட்டு, முன்னமே நெருப்பைப்போற் சுடும்படி பெருமூச்சு விட்டு அதிக கோபங்கொண்டு, "சபாநாதருடைய அடியார்களுக்குப் பரம்பரையாகச் சத்துருவாயுள்ளது யானையல்லவோ? ஆதலால் அதைக்கொன்று கீழேவிழத் தள்ளுவேன்" என்று கொலைக்கேதுவாயிருக்கின்ற மழுவாயுதத்தை யெடுத்துக்கொண்டு வந்தார்.

21. வந்த எறிபத்த நாயனார், முறையிட்டழைத்த சிவகாமியாண்டாரைக்கண்டு தொழுது, "சுவாமீ, உம்மை இப்படி வருத்தமுற வலிய துன்பத்தைச் செய்த யானை எவ்விடத்தில் போயிற்று" என்று கேட்க, அவர், "நமது ஆண்டவர்க்குச் சாத்தவேண்டிக்கொண்டுவந்த புஷ்பங்களைச் சிறிது நேரத்துக்குமுன் என்கையிலிருந்து பறித்துப் பூமியில் இறைத்துவிட்டுத் தப்பிப்போய்க் கொண்டிருக்கிறது இந்தத் தெருவின்வழியாக" என்றுசொன்னார்.

22. எறிபத்த நாயனார் கோபங்கொண்டு, "இனியிந்த யானையானது எப்படித் தப்பிப் பிழைத்துக்கொள்ளும்" என்று கூரியவாயின் வழியாக நெருப்பைக் கக்காநின்ற கையிற்பிடித்த மழுவாயுதமும் தாமும், வடவாமுகாக்கினியும் சண்டமாருதமும் போல், மிகுந்த விசையாகச்சென்று, போர் செய்யும் திறத்தையுடைய யானையைத் தொடர்ந்து பிடிக்குஞ் சிவப்பாகிய நிறமுள்ள கண்களையுடைய ஒளி பொருந்திய சிங்கம்போன்று, யானையைக் கிட்டினார். (வாள் என்பதற்கு, வாள்போன்ற நகங்கள்எனக் கூறினும் பொருந்தும்.)

23. அன்பராகிய எறிபத்தநாயனார், யானையைக்கண்டபோது, "இது, சுவாமி, முன்னே கொன்று, தோலுரித்த அந்த யானைக்குச் சமானமாயிருப்பதுபோலும்" என்று நினைத்துத் "தேவர்களும், பூலோகத்தில் உள்ளவர்களும், வந்து தடுத்தாலும், கோபித்து, இரத்தம் சிந்தும்படியாகத் துண்டஞ்செய்து, கொன்றுவிடுவேன்"

என்று, பிரகாசம் பொருந்திய மழுவாயுதத்தைப் பலங்கொண்டு வீசி, காலால் எழும்பி யானைமேல் நடுங்கப் பாய்ந்தார்.

24. எறிபத்த நாயனார் பாய்ந்தவுடனே, அதிகவேகத்தோடு, அவர் மேற்செலுத்தா நின்றபாகரைத் தாங்கிக்கொண்டு சீறி, காய்ந்த நெருப்புப் பொறிகளைக் கக்காநின்ற கண்களை உடைய யானையானது, கோபங்கொண்டு பக்தர்மேலே திரும்பின அளவில், அதினுடைய பாய்தலைத் தடுத்து, எதிர்த்து, நிலத்திற் றோயும்படி நீண்டிருக்கும் ஒப்பற்ற பருத்த துதிக்கையானது அற்று விழும்பாடியாக,மழுவாயுதத்தினாலே,துணித்தார்.ஆதலால், பயமானது தலைமையாகிய அன்பிற்கு முன்னே எதிர்த்து நிற்குமோ. (தாய்தலை - தொகுத்தல் விகாரம்.)

25. கரியமலைபோன்ற யானையானது, துதிக்கையை வெட்டின அளவில், சமுத்திரம் முழங்குவதுபோலக் கூச்சலிட்டுக் கீழே விழுந்து புரள, அருகில் வந்து கொண்டிருந்த வெப்பமாகிய குத்துக் கோல்களைத் தரித்த மூவரும், மேலேறிக் கொண்டிருந்த பாகர் இருவரும், ஆகிய ஐந்து மனிதர்களையும், சங்கரித்து நின்றார்,அரியமலை போன்ற தோள்களையுடைய எறிபத்த நாயனார்.

26. எறிபத்த நாயனாரால் வெட்டுப்பட்டு விழுந்தவர்கள் தவிர, யானைக்குச் சம்பந்தப்பட்ட மற்றவர்கள், ஓடி, தேன் விரிந்த மாலையைத் தரித்த புகழ்ச் சோழராசாவினது அரண்மனை வாயிலைக் காக்கின்றவர்களைப் பார்த்து, "'ஒருவனால் பட்டவர்த்தனமென்கிற யானையும் இறந்து, பாகர்களும் இறந்தார்கள்'என்று நீங்கள் சீக்கிரத்தில் சென்று இராசாவுக்குச் சொல்லுங்கள்" என்றார்கள். (கேடுண்டு என்பது, உண்டற்குரிய வல்லாப்பொருளை உண்டெனபோலக் கூறலுமியலுமே, என்பதனால் வந்தது.)

27. அவர்கள் சொன்ன வார்த்தையை, அழகிய வாயில் காப்போர்கள் கேட்டு, இராசாவின் சமுகத்தை அடைந்து, வீரகண்டை சப்திக்கின்ற அவரது பாதத்தை வணங்கி நின்று கொண்டு, "ஒரு சத்துருவும் இல்லாத மன்னனே, உமது பட்

டத்து யானை இறக்கும்படி, சில மனிதர்கள் கொன்றார்களென்று பாகர்சொல்லுகின்றார்கள்'' என உரைத்தார்கள். (செற்றனர் சிலராமென்றது, எறிபத்தநாயனாரையும் சேர்த்தற்கு.)

28. புகழ்ச்சோழரும், இந்த வார்த்தையைக்கேட்ட அளவில், மாறுபாடில்லாமல் உலகத்தைக் காக்கின்ற தோள்களானது, வண்டினங்கள் வாழ்ந்திருக்கும மாலையிலும் பிரகாசித்து பூரிப்படைய, அளவில்லாத கோபங்கொண்டவரானபடியால், 'யார் யானையைக் கொன்றவர்கள்'என்றுகேட்கும் அவகாசமுமில்லாதவராகி, இளஞ்சிங்கக் குட்டிபோல், அழகு பொருந்திய மணிகள் பதித்துள்ள அரண்மனைவாயில் நின்றும் வெளிப்பட,—

29. இராசாவானவர் ஒருவராய்ப் புறப்பட்ட நிலைமையைப் பார்த்து, அவருடைய சேனாதிபதிகளும், தங்களுடைய ஆணையின் கீழ்ப்பட்டிருக்கும் சேனைகள், அதிசீக்கிரமாய் எழுந்து வந்து, இராசாவை நாற்புறத்திலுஞ் சூழும்படி, பறைசாற்றுவிக்க, ஆகாசத்தின் விரிவிடமெல்லாம், அழகு பொருந்திய வஸ்திரக் கொடிகள் மறைக்க, சூத்திரம் வைத்திருக்கின்ற தேர்களும், குதிரைகளும், நடுவில் நடுவில் யானைகளுமாய் நிரம்பி,—

30. வில், வேல், வாள், தண்டாயுதம், பிண்டிபாலம், வலிய இருப்புலக்கைகள், சக்கரம், மழுவாயுதம், சூலம், இவை முதலாகிய அநேக ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு, அழகிய வீரகண்டையைத் தரித்து, யுத்த விஷயத்தில், தாட்சணியமில்லாத அளவில்லாத வீரர்கள், சூழ்ந்து பல விடத்தில் நின்றும் எழுந்தார்கள். (கொட்புற்று, என்பதற்கு, போர்க்குச்செல்லும் போது, இடசாரி வலசாரியாகச் சுற்றிப் பலவித்தியாசமான அவ்வித்தையின் தொழில்களைச் செய்தென்று பொருள் கூறுதலும் ஒரு பட்சம்.)

31. சங்க வாத்தியமும், தாரையும், காளமும், ஆழ்ந்து முழங்குகின்ற ஒலியையுடைய பேரியும், வெவ்விய நாதத்தைக் கொடுக்கின்ற பம்பையும், தண்டையும்,பெருமை பொருந்திய உடுக்

கையும், திமிலையும், முழங்கச்செய்து, மற்றும் வேண்டிய ஒலி மிகு தற்கு ஏதுவாயிருக்கும் வாத்திய விசேஷங்களெல்லாம், போர் செய்யும் படைகள் அழகாய் நெருங்கினதினாலே, ஆகாயத்தில் சஞ் சரிக்கும் மேகக்கூட்டங்களின் ஒலிநாணும்படியாக, சேனைகளின் மருங்கே, சத்தித்து, எவ்விடத்திலும் கேட்ப,—(தட்டல் என்பது, எல்லா வாத்தியங்களுக்கும் சொல்லக்கூடாதாகையால், முழங் குதலென, அதற்கு, ஆகுபெயர்ப்பொருள் கொண்டோம். அல்லது, தட்டப்படும் வாத்தியங்கள் அநேகமாதலால் மிகுதிபற்றிக் கூறினா ரெனினும் பொருந்தும்.)

**32.** பேரி வாத்தியத்தின் முழக்கமும், பிரகாசம் பொருந் திய ஆயுதங்கள் ஒன்றினேடொன்று தாக்குதலால் உண்டான முழக்கமும், குதிரையின் கழுத்தி லணிந்த ஒழுங்காகிய சதங்கை மாலைகளின் முழக்கமும், யானை வீரிடுகிற முழக்கமும், விசால மாகிய தேரோடுதலா லுண்டாகிய முழக்கமும், சுத்த வீரர்களு டைய கர்வத்தால் உண்டாகியமுழக்கமும், மிகவும் ஒன்றாய்ச் சேர்ந்தெழும்பியபோது, ஊழிக்காலத்தில் எழும்பிய மேகத்தோடு சங்கார காலத்தில்பொங்காநின்ற சமுத்திரத்தின் கோஷம்போல, முழங்கிற்று.

**33.** அலங்கரிக்கப்பட்டுள்ள ரதகச துரபதாதியாகப் பரவி யெழுகின்ற சேனைகளெல்லாம், பூமியில் ஊழிக் காற்றானது மேலும் மேலும் அடித்தெழும்பி வருகின்றதுபோலத் தோன்றக் குளிர்ச்சியாகிய கிருபைபொருந்திய குடையையுடைய புகழ்ச்சோழ ராசனானவர், சேனைகள் தமக்குப்பின்னே தொடர்ந்துவரத் தாம் ஒரு உயர்வாகிய குதிரையின்மேல் ஆரோகணித்து, அரசர்கள் தங் கிய வீதிவழியாகச் சென்றார். (இராசனுக்குள்ள கிருபையைக் குடைக்கு ஏற்றி, அளிக்கவிகை மன்ன, என்றார்.)

**34.** புகழ்ச் சோழராசரானவர், கடியவிசையிற் சென்று யானையோடு பாகர்களும் விழுந்திறந்த அமர்க்களத்தின் அருகில் சென்றார். சத்துருக்களைப் பார்க்காதவராய், காந்தியை வீசு

கின்ற ஒப்பற்ற மழுவாயுத மொன்றைக் கையில் தாங்கித் துதிக் கையன்றி வேறு இரண்டு பெரியகைகளை மாத்திரம் உடைய கொலைசெய்யும் யானைபோன்று நின்ற எறிபத்தநாயனாரைக் கண்டார். (எறிபத்தநாயனார் சிவபக்தராதலால், அவரைச் சத்துருவாக நினைக்காமல், 'வேறுசத்துரு இருக்கவேண்டும்' என நினைப்பவர், பகைப்புலத் தவரைக்காணுன் என்றார்.)

35. பொற்பொடிகள் தவழ்கின்ற அருவியாற்றினையுடைய மலைபோல் புரண்டுகொண்டிருக்கும் யானைக்கு முன்னே நிற்கின்றவர், கனகசபையில் எக்காலத்திலும் தாண்டவஞ் செய்தருளுகின்ற கைலாசபதியினுடைய அடியவராயிருக்கின்றார். இவரே இந்த யானையைக் கொன்றவரென்று எவ்வளவும் நினைக்காதவராய, அதிரும்படியான சொற்களாக, "யானையைக்கொன்றவர் யாவர்" என்று கேட்டார் புகழ்ச்சோழர்.

36. இராசாவானவரிப்படி சொன்னபோது, ஒழிந்து நின்ற பாகர்கள், அவர் அருகிற்சென்று, "வாசனை பொருந்திய புஷ்பங்களால் கட்டப்பட்ட மாலையையுடைய அரசரே, உம்முடைய வெற்றி பொருந்திய யானையோடெதிர்த்து நிற்பவர்கள், அலைமோதுகின்ற சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்திலிருக்கின்ற இராசாங்கங்களில் யாவரிருக்கின்றார்கள்? ஆதலால் மழுவாயுதத்தைக் கையில் கொண்டு இவ்விடத்தில் நிற்கின்றவரே கொன்றார்" என்று வணங்கிச்சொன்னார்கள்.

37. "நாககுண்டலத்தைத் தரித்த திருச்செவியினையுடைய சுவாமிக்கு அன்பராய்க் குணங்களிற் சிறந்தவராகிய எறிபத்த நாயனார், யானையானது பிழை செய்தாலல்லாமல் கொல்ல மாட்டார். ஆகையினால் அதுகுற்றஞ்செய்திருக்கவேண்டும்"என்று மனதிலெண்ணி, மழைபோல் மதத்தைச் சொரிகின்ற யானையும் குதிரை காலாள் முதலிய மற்றைச் சேனையையும், அந்த இடத்துக்கு வர வொட்டாமல் நிறுத்தி, ஜெயத்துக்கு இடமாயிருக்கின்ற தமது குதிரையில் நின்று கீழே யிறங்கினார், உலகத்தை யாளும்

புகழ்ச்சோழர். (உலைவயப் புரவி, யென்று பாடஞ்சொல்லி, உலைக்குப் புறமயிரெனப் பொருள் கூறுதலும் உண்டு.)

38. பெரியதாய்க் கரிய நிறத்தையுடைய மலை போன்ற மதங்கொண்ட யானைக்கெதிராக, "இந்த வுண்மையாகிய தபசியானவர், போனபோது, அவர்க்கு, வேறொரு அபாயம் சம்பவிக்காமலிருக்கும்படி பூர்வசன்மத்தில் புண்ணியம் பண்ணியிருந்தேன். நடேசருடைய அன்பராகிய இந்தப் பெரியவர் இவ்வளவு கோபித்துக்கொள்ள என்னபிழை யுண்டாயிற்றோ?" என்று பயப்பட்டு,- (கெட்டேனென்பது, துக்கத்தில் வரும் இடைச்சொல்லாம்.)

39. எறிபத்தநாயனாரைச் சூழ்ந்துகொண்ட தமது பரிசனங்களை நீக்கி, அவ்வடியார்க்கு முன்பாகப் போய் நின்றுகொண்டு, "இந்த யானை செய்த செய்கையை அடியேன் அறிந்திருக்கவில்லை; என்னரண்மனையில் நான் கேட்டவார்த்தை ஒரு விதமாயிருக்கின்றது; அது நிற்கட்டும்; எதிர்த்த இந்த யானையினால் உண்டான குற்றத்திற்குப் பாகரோடும் இந்த யானையைச் சாக மழுவால் துணித்தது போதுமா? அல்லது போதாவிடின் தேவரீர் கட்டளையிட்டபடி எப்படிப்பட்ட பிராயச்சித்தத்துக்கும் உள்ளாகின்றேன்; அருள் செய்யும்" என்று நின்றார். (அங்குக்கேட்டதொன்று என்பது யானையை அடியார் கொன்று என்றுமல்சிலர் கொன்றனர் என்று கேள்விப் படுதல்.)

40. தேவர்களுக்கு இறைவராகிய பரமசிவனது அடியாரான எறிபத்தநாயனார், புகழ்ச்சோழரைப்பார்த்துச் "சிவகாமியாண்டாரென்கிற பெரியவர், சர்ப்பங்களை ஆபரணமாகத் தரித்திருக்கின்ற கைலாசபதிக்குக் காலையிற் சாத்தும்படியாகக் கொண்டுவந்த புஷ்பங்களால் கட்டப்பட்ட மாலைகளை, தலையெடுப்பாய் உயர்ந்திருக்கின்ற உமது யானையானது, பறித்துக் கீழே சிந்தினபடியால், அந்தயானை தரையில் விழும்படி வெட்டித்தள்ளினேன், (பள்ளித் தாமம் என்பது, காலை வேளையில் சுவாமிக்குச் சாத்தக் கட்டப்பட்ட மாலை.)

41. "யானையானது புஷ்பங்களைச் சிந்தித் தீங்கு செய்த போது, முன்னே ஓடுகின்ற குத்துக்கோற்காரரும், மேலே ஏறி நடத்துகின்ற பாகரும், அந்த யானையை விலக்காதிருந்தபடியால், அக்குற்றத்தைப்பற்றி அவர்களும் இறந்தார்கள். இச்செய்கையேஇவ்விடத்தில் நடந்தது," என்றுஎறிபத்த நாயனார்சொல்ல, பெரியமலைபோலும் விசாலமாகிய தோள்களையுடைய புகழ்ச்சோழ ராசாவானவர், பயப்பட்டு, எறிபத்தரது பாதங்களில் முறையாக வணங்கி,—

42. "அழகிய கண்களையுடைய பரமசிவனாருடைய அடியார்களுக்குச் செய்த இப்படிப்பட்ட அபராதத்துக்கு, இந்த யானையும் பாகரும் முதலாயினோர் இறந்தது மாத்திரமே போதாது; ஈடுகட்டும்படி அடியேனையும் கொல்லவேண்டும்; நன்மை பொருந்தியிருக்காநின்ற தேவரீர் கையிலுள்ள மழுவாயுதத்தால், இந்தப் பாவியைக் கொல்லுதல் நெறியன்று" என்று, தமது சிவப்பாகிய கையினால், உறையில் நின்றும்உடைவாளையுருவி, "இது தகுந்தது" என்று கொடுத்தார், பாவத்தொழில்கள் தீரவேண்டுமென்கிற கருத்தையுடையவர்.

43. வெப்பமாகிய நெருப்பினது சுடர்போல் பிரகாசிக்கின்ற வாளாயுதத்தை நீட்டும் புகழ்ச்சோழருடைய பக்தியின் அழுத்தத்தைப் பார்த்து, "கெட்டேன்! அளவில்லாத புகழையுடைய இச்சோழராசாவினது பக்திக்கு, ஒரு எல்லையைக் காணகிலேன்" என்று, கொடுத்தவாளை வாங்காதவராய்ப், பின்பு, அவர்கையிலே வாளிருந்தால் தம்மைத்தாமே மாய்த்துக்கொள்வர், என்று மனதிலே ஆலோசித்துப் பயப்பட்டு, அடியார்களுடைய தீங்கு தீர்க்கும்படியான எறிபத்தநாயனார், அதை வாங்கினார்.

44. இவ்விதமாக, வாளை வாங்கிக்கொண்ட அடியவர்க்கு முன்பாக, இராசாவானவர், தொழுது நின்று, "இவ்விடத்தில் அடியேனை வாளினால் கொன்று, யான் செய்த அபராதத்தைத் தீர்க்கும் பொருட்டு, மிகவும் உதவிசெய்யப் பெற்றேன், இவ்வடி

யாரிடத்தில்'' என்று அச்சோழர் சொல்லக்கேட்டு, எறிபத்தநாயனு ரானவர் பயப்பட்டு,—

45. "வலிமை பொருந்திய பெருமையாகிய தமது பட்டத்து யானையும் பாகரும் மடிந்துபோகவும், அதற்கு எவ்வளவும் விசனப்படாமல், உடைவாளைக் கொடுத்து, 'தாம் யானையை, ஒருவர்க்குந் தீங்கு செய்யாமல் போகும்படி, செய்யவில்லை' என்பதனுல் வந்த குற்றத்திற்காகத் தம்மையுங்கொல்லும்படி, பணிவோடு கேட்டுக்கொள்ளுகின்ற புகழ்ச்சோழராசாவாகிய சிவபக்தர்க்குத் தீங்கு நினைத்தேன்.'' என்று எண்ணி "முதலில் என்னுயிரைக் கொன்று முடித்துக்கொள்வதே தீர்ப்பு'' என்று நினைத்து,—

46. புகழ்ச்சோழராசாவானவர், தம்மை, வெட்டும்படி எறிபத்த நாயனுர் கையில் கொடுத்த வாளை, அவர், தம்முடைய கழுத்திற்சேர்த்து அறுத்துக்கொள்ளப் போனபோது, இராசாவும், "பெரியோர்கள் செய்கை இப்படித்தா னிருக்குமோ? கெட்டேன்.'' என்று சீக்கிரத்தில் எதிராகப் போய், வலிமை பொருந்திய பெரிய கைகளால் தொடர்ந்து வாளையுங் கையையும், அவரெண்ணம் நிறைவேருமல், தடுத்துப் பிடித்தார்.

47. புகழ்ச்சோழரானவர் விடாமல் பிடித்துக்கொண்டிருக்க, பக்தரானவர் தம்முடைய எண்ணம் நிறைவேருமல் வருந்தி நிற்க, அத்தருணத்தில், அளவில்லாத அன்பினுல், இருவருக்கும் உண்டாகிய இந்தத் துக்கத்தை நீக்கும்படியாக விரும்பி, விஷத்தைத் தரிக்கா நின்ற கண்டத்தினையுடைய பரமசிவனின் திருவருளால், அசரீரிவாக்கானது, பிரகாசத்தையுடைய ஆகாசத்தில், யாவருங்கேட்கும்படியாக உண்டாயிற்று. (களம் என்பது பண்பாகுபெயர்.)

48. (அந்த அசரீரிவாக்கினுற் பொருளாயின தென்னவெனின்,) "யாவருந் தொழும்படியான தகுதியையுடைய அன்பிற் சிறந்தவர்களாகிய அடியார்களுடைய பக்தியை, உலகத்தில் காண்பிக்கச் செழுமை பொருந்திய அழகிய புஷ்பங்களை, இன்

புற்றது. அதனால், அவ்வூர் கலக்கமுற்றது. அதனுடைய மதநாற்
றம் மூக்கிற் பட்டதும், மற்ற யானைகள் ஓடிப்போய் விட்டன.
மலையைப் பிளக்கும் பருத்த அதன் இரண்டு தந்தங்களைத் தூரத்
தே கண்டதும், நாள்தோறும் ஜனங்கள், அஞ்சி ஓடினர். மாவெட்டி
கள் நூறு பேர், அதன் மத வெறியைப் பிறருக்கறிவிக்க வேண்டி,
அந்த யானையின் முன்னும் பின்னும், பெரு முழக்கம் செய்து
கொண்டே, கூரிய கட்டியைக் கையிலே தாங்கி, அதனுடன் திரிந்
தனர். அரசனுடைய ஆணையின்படி, இரவும் பகலும் சேவகர்கள்
நகரத்தைப் பாதுகாத்து வந்தனர்.

எறிவார், நடுப்பகலில், குளிப்பதற்காகக் குளத்திற்குச் சென்
றார். சிவதர்மரும், அப்போது, பூக்களைப் பறிப்பதற்காகப் புண்
ணியமான சிவநாமங்களை, மனத்தாலும் பாடிக் கொண்டே, வந்து
சேர்ந்தார். குளித்தபின், மத்தியான சந்தியை முடித்துக்கொண்டு
பொய்கையின் கரையி லேறினார். அந்த யானை மதம் பிடித்திருந்
தும், தண்ணீர் குடிக்கப் பொய்கையை அடைந்தது. அருகே
தடுக்கப்பட்டோராய்ப் பக்கத்தில், வேறொரு வழியேபோய், மறைந்
தார். பூங்குடலையைத் தூக்கிக் கொண்டுவரும் அவர், அருகே யானை
வரக்கண்டு, உயர்ந்த குரல் எடுத்துச் "சங்கரா என்னைக் காப்பாய்"
என்று ஓலமிட்டார். மதம் பிடித்திருப்பதன் பயனாக, அவ்யானை,
ஆழ்ந்தொலிக்குமாறு உரக்கப் பிளிறிக் கொண்டே, விரைந்து
வந்து, அந்தப் பூங்குடலையை வெடுக்கெனப் பிடுங்கி, நூறு துண்
டாக எறிந்தது; பூக்களையும் சிதறியது. பூக்கள் சிதறியதும்,
அந்தச் சிவதருமர், அறிவு கலங்கி, மாவெட்டிகளை நோக்கி, "ஏ,
கொடியோர்களே! தீயோராகிய நீங்கள், சிவார்ச்சனைக்கு விரோ
தம் புரியும் இந்த யானையை என் இவ்வாறு செலுத்தினீர். என்
செய்வேன்! எங்குச் செல்வேன். எனக்கொரு புகலுமில்லை. ஈது,
உங்களால் செய்யப்படவில்லை. சிவத்துரோகியாம் அரசனால் செய்
யப் பட்டது" என்று கூறினார்.

மேன்மையாகிய அந்த உத்தரவைச் சிரசாக வகித்துக்கொண்டு, அவ்வெறிபத்த நாயனுருக்கு நமஸ்காரஞ்செய்து, மூன்குதிரையின் மேல் வந்த புகழ்ச்சோழர், வெள்ளைக் குடையினது நீழலின் கீழ், யானையின் மேலேறிக்கொண்டு போயினுர்.

**53.** அவ்விடத்திலெழுந்த சேனைகள், எழு சமுத்திரமும் ஒன்ருய்ச் சேர்ந்து ஒலித்ததுபோல், சப்திக்கவும், இவ்வுலகத்தி லிருக்கின்ற சிவனடியார்களெல்லாம் சந்தோஷித்துத் துதிக்கவும், பொன்னம்பலத்தில் எக்காலத்திலும் நடனஞ்செய்கின்ற நடேச ருடைய அழகிய திருவடிகளைச் சிரசில் தாங்கிக்கொண்டு, புகழ்ச் சோழர், அழகிய அரண்மனையில் புகுந்தார்.

**54.** பரமசிவனுடைய பணிவிடையை மேன்மையாகக் கொண்டு, சிவகாமியாண்டாரும் போக, எமது கடவுளினுடைய பக்தராகிய எறிபத்த நாயனுரும், "என்ன ஆச்சரியம்! சிதம்பரத் தில் நடனஞ்செய்கின்ற நடேசருடைய அடியார்கள், எப்படிப் பட்டவர்களாலும் அறிதற்கு அரியவர்கள்" என்று புகழ்ச்சோழரு டைய பெருமையை நினைத்துத் தம்முடைய பணிவிடையின்மேற் சென்ருர்.

**55.** எறிபத்தநாயனுர், இப்போது, சிவகாமி யாண்டார்க்கு வந்த ஆபத்தைத் தீர்த்ததுபோல், அனேகம் வலிமையாகிய பெரியதிருத்தொண்டுகளைப் பூமியில் இடையூறுவந்தபோது அடி யார்களுக்குமுன்சென்று அத்தீங்குவரவொட்டாமல் உபகாரமாகச் செய்து, நாள்தோறும் உயர்ந்த தவவேடத்தைப் பெற்று, நன்மைமி குந்திருக்கும் கயிலாயத்தில், பாபங்களை ஜயித்த சிவகணங்களுக்கு முன்னே, முதன்மையான தலைவராக விருக்கப்பெற்ருர்.

**56.** பரமசிவனுல் ஆட்கொள்ளத்தக்க திருத்தொண்டு செய் கின்ற எறிபத்தநாயனுர் செய்த வல்லமையும், தம்மைக் கொல்லும் படியாகத் தாமே வாளாயுதத்தைக் கொடுத்து வெட்டுப்படுதற்குக் கழுத்தினைக் கொடுத்து நின்ற புகழ்ச்சோழரது பெருமையும், எந்நாளும் யாவர்க்கும் அனுக்கிரகஞ் செய்கின்ற பரமசிவனுல்

அருளிச்செய்யப்பட வேண்டுமேயன்றி, உயர்ந்த இத் திருத்தொண்டின் குணத்தைக் குறித்து நினைத்தால், யாவரால் அளந்தறியக் கூடும்.

57. தேனாருந் தண்பூங் கொன்றைச் செஞ்சடை யவர்பொற் றாளி
லானாத காத லன்ப ரெறிபத்த ரடிகள் சூடி
வானாளுந் தேவர் போற்று மன்றுளார் நீறு போற்று
மேனாதி நாதர் செய்த திருத்தொழி லியம்ப லுற்றேன்.

தேன் நிறைந்த குளிர்ச்சி பொருந்திய கொன்றைப்பூ மாலையைத் தரித்த செய்ய சடையையுடைய பரமசிவனது அழகிய பாதங்களில், குறையாத ஆசையுற்ற அன்பினையுடைய எறிபத்த நாயனார் பாதங்களைச் சிரசில் தரித்து, தேவலோகத்தை ஆளுகின்ற பலவகைத் தேவர்களும் வணங்குகின்ற நடேசருடைய திருநீற்றினையே, எல்லாச் சிவவேடங்களிலும் சிறந்ததாக நினைத்து, அதைப் பாதுகாக்கின்ற ஏனாதிநாயனார் செய்த திருத்தொண்டின் செய்கையைச் சொல்லத் தொடங்கினேன்.

## இணைப்பு—2.

### ஹரதத்த முனிவர் இயற்றிய

# சிவபக்த விலாசம்.

### 24-ம் அத்தியாயம்.

சிவ அன்பர்களைக் காப்பாற்றத் தம்முயிரை விடுவோர், சிவனருளால், வினைக்கட்டின் நின்றும் விடுபட்டவ ராவர். உயிரைப் புல்லெனக் கருதித் துறக்கும் எறிவார் எனும் பெரியாருடைய - கேட்டதும் பாவத்தைப் போக்கும் புண்ணியக் - கதையை இப்போது சொல்லுகின்றேன். ஆனிலை என்னும் பெயருடைய புராரியின் கோயில், பூலோகத்தில் இருக்கிறது. அங்கே, மகேச தேவரை, எறிவார், நாள்தோறும் வழிபட்டு வந்தார். சிவனுக்கோ, சிவபக்தருக்கோ, பூலோகத்தில் துரோகம் செய்வாரைப் பூதலத்தில் கொல்வதற்கென்று, கையிலே மழுவை, அவர் தரித்திருந்தார். அவ்வூரில், சிவதர்மர் என்னும் பெயருடைய பிராமணர் ஒருவர், இருந்தார். தன்னுடைய கையாலேயே பறித்த பூக்களைக் கொண்டு, எங்கும் நிறைந்த இறைவனுக்கு அருச்சனை புரிவதே, பிறப்பிலிருந்து அவர் மேற்கொண்ட விரதம். இந்த விரதத்திலிருந்தும் அவர் தவறவில்லை. மூன்று காலமும் தன்னுடைய ஈசுவரனும் பெரிய தேவனை அருச்சித்துப் பூத்தொண்டே குறிக்கோளாய், இவ்வாறு இவர் இருந்துவர, நீண்டகாலம் கழிந்தது. அங்கே அநபாயனயர் என்னும் அரசர், பெரிய புகழுடையாராய்ச் சதுரங்க சேனையுடன், வீரத்தில் இந்திரனுக்கு ஒப்பாக இருந்தார். அவர் சங்கரனிடத்தும், பக்தரிடத்தும் பேரன்புடையார்; சிவத்துரோகிகளைக் கண்டவுடனே, அவர்களைத் தண்டிப்பார்; நாள்தோறும், பூசனை புரிவதில் ஈடுபட்டுப் பக்தர்களில் உத்தமராயினர். மலையைப் போன்றுயர்ந்த அவருடைய படையானையில் ஒன்று, மதத்தால்களிப்

புற்றது. அதனால், அவ்வூர் கலக்கமுற்றது. அதனுடைய மதநாற்றம் மூக்கிற் பட்டதும், மற்ற யானைகள் ஓடிப்போய் விட்டன. மலையைப் பிளக்கும் பருத்த அதன் இரண்டு தந்தங்களைத் தூரத்தே கண்டதும், நாள்தோறும் ஜனங்கள், அஞ்சி ஓடினர். மாவெட்டிகள் நூறு பேர், அதன் மத வெறியைப் பிறருக்கறிவிக்க வேண்டி, அந்த யானையின் முன்னும் பின்னும், பெரு முழக்கம் செய்து கொண்டே, கூரிய ஈட்டியைக் கையிலே தாங்கி, அதனுடன் திரிந்தனர். அரசனுடைய ஆணையின்படி, இரவும் பகலும் சேவகர்கள் நகரத்தைப் பாதுகாத்து வந்தனர்.

எறிவார், நடுப்பகலில், குளிப்பதற்காகக் குளத்திற்குச் சென்றார். சிவதர்மரும், அப்போது, பூக்களைப் பறிப்பதற்காகப் புண்ணியமான சிவநாமங்களை, மனத்தாலும் பாடிக் கொண்டே, வந்து சேர்ந்தார். குளித்தபின், மத்தியான சந்தியை முடித்துக்கொண்டு பொய்கையின் கரையி லேறினர். அந்த யானை மதம் பிடித்திருந்தும், தண்ணீர் குடிக்கப் பொய்கையை அடைந்தது. அருகே தடுக்கப்பட்டோராய்ப் பக்கத்தில், வேறொரு வழியேபோய், மறைந்தார். பூங்குடலையைத் தூக்கிக் கொண்டுவரும் அவர், அருகே யானை வரக்கண்டு, உயர்ந்த குரல் எடுத்துச் "சங்கரா என்னைக் காப்பாய்" என்று ஓலமிட்டார். மதம் பிடித்திருப்பதன் பயனாக, அவ்யானை, ஆழ்ந்தொலிக்குமாறு உரக்கப் பிளிறிக் கொண்டே, விரைந்து வந்து, அந்தப் பூங்குடலையை வெடுக்கெனப் பிடுங்கி, நூறு துண்டாக எறிந்தது; பூக்களையும் சிதறியது. பூக்கள் சிதறியதும், அந்தச் சிவதருமர், அறிவு கலங்கி, மாவெட்டிகளை நோக்கி, "ஏ, கொடியோர்களே! தீயோராகிய நீங்கள், சிவார்ச்சனைக்கு விரோதம் புரியும் இந்த யானையை ஏன் இவ்வாறு செலுத்தினீர். என் செய்வேன்! எங்குச் செல்வேன். எனக்கொரு புகலுமில்லை. ஈது, உங்களால் செய்யப்படவில்லை. சிவத்துரோகியாம் அரசனால் செய்யப் பட்டது" என்று கூறினர்.

இவருடைய இந்த அழுகுரல், நீண்ட தூரம் வரை கேட்டது. எறிவார் அதனைக் கேட்டுவந்து, பூசுராரை நோக்கி, "பெரியீர், சிவ பூஜையிலீடுபட்ட உங்களது புஷ்பங்கள் எவரால் கெடுகின்றன. அதனைச் சொல்லும். என்னுடைய விக்கிரமத்தை இப்பொழுது பாரும்" என்று கூறினர். சிவதருமர், கொடிய யானையின் அந்தச் செயலை, எடுத்துச் சொன்னர். அது கேட்டு, காதிலே கையைப் பொத்திச் "சிவ சிவ" என்றூர். அப்போது அந்தக் கணத்திலேயே, கோபத்தினல், வேள்வித்தீப்போலப் பிரகாசித்தார். உயிர்போவ தேனும் அஞ்சாதவராய், அந்த மதயானையைப் பின்தொடர்ந் தோடினர். அதனுடைய காலிலே தாக்கினா. அது திரும்பிப் பெரு முழக்கம் செய்தது. துதிக்கையால் பிடிக்க வருகையில், அதன்முன்னே வந்து, கூரிய ஆயுதத்தால், தந்தங்களின் நடுவே வெட்டினர். அந்த அடியினல், அந்தப் பெரிய யானை, உயிரற்றுக் கீழே விழுந்தது. யானையின் கழுத்திலேறிக் கொல்ல விரும்பிய ஆததாயிகள் மூவரையும், பின் வந்த இருவரையும், கொன்றூர். யானையோடு வந்த மற்றையோர், அச்சத்தால், அரசனிடம் சென்று கண்டோரைத் திகைக்கச் செய்யும் எறிவாரின் வீரச்செய்கை யைத் தெரிவித்தனர். அந்த அரசன், விரைந்துவந்து, கிருஷ்ண ஞல் குவலயாபீடம் கொல்லப்பட்டதுபோலக் கொலையுண்ட யானையையும், சேவர்களையும், எறிவாரையும், பூவையிழந்து வருந் தும் சிவதருமரையும், பார்த்துப் போர்க்கோலம்கொண்டெழுந்த வீரர்களைத் தடுத்துவிட்டுக் கைகூப்பி, "என்னைச்சேர்ந்தவர்,செய்த காரியம் நிச்சயமாக யான் செய்ததேயாம். நான் சிவபெருமானி டத்தும் அபராதியாய் விட்டேன். இந்தத் துரோகிக்குச் சாவைத் தவிர வேறு வழியும் காணேன். ஆகையால் எறிவாரே! இந்த மழுவினலே என்னையும் வெட்டும். நீர் தண்டித்தால், நானும் கூட' மிகப் புண்ணியவானவேன்' என்று கூறினர். இந்தச் சொற்களைக் கேட்டு, அருளாளரான எறிவார், தாமிறப்பதற்கு முந்துவாராய், அவருடைய கையிலிருந்தும் மழுவை வாங்கிக்கொண்டார். தானே

தன் கழுத்தை அறுப்பான் முன்வந்த அவ்வரசனைப் பேரன்பரான எறிவார் அறிந்து, அறிவு குழம்பி நின்றார். "நான் இந்த அநபாய னயனை - சம்புவின் பேரடியானை - அறமே கண்ணாய் நின்றானை - சிவபக்தனை - அறியாமையால் இத்தகைய இவை, கொல்லப்பட்ட னவே! சிவபக்தர்களுடைய பொருளைக் கெடுத்தவனுக்கு, அவனு டைய மரணமே பிராயச்சித்தம். வேறு கழுவாய் இல்லை. இப் போது, இந்தமழுவினால், நானே, கழுத்தறுபடுவேனாக" என்றார். "நானே துரோகி! பன்முறையும் நானே துரோகி! மூன்னும் நானே துரோகி!!" என்று இப்படிச் சாவமுந்துவோராய், ஒருவரை ஒரு வர், ஆயுதத்தைப் பிடித்துத் தடுத்துக்கொண்டிருக்கும் சமயத்தில், அசரீரி வாக்கு ஒன்றெழுந்தது. "அநபாயனயனே! உன்னுடைய சாம்ராச்சியத்தையும் விட்டு, பக்தத்ரோகத்திற்காக, உன் உயிரை விட முந்தினாய். அரசனே! அதனால் இப்போது நான் உன்மீது விருப்பமுடையவனானேன். எறிவோரே! நானும் உமக்குவிருப்பன். செய்யமுடியாததைச் செய்தீர்! மழுவைவிட்டெறிந்து, இது முதல் மனத்தாலேயே வழிபாடு செய்யும். நீர் முத்தராய்விட்டீர். அழிந் தன அனைத்தும் எழக்கடவன ஆக" என்று சொன்னதும் யானையும், ஐந்து சேவகர்களும், விரைவாக எழுந்து நின்றனர். எல்லோரும் வியப்படைந்தனர். தேவர் பூமாரி பொழிந்தனர். அரசர், எறிவா ரையும் சிவதருமரையும் வணங்கி, அவர்களோடு நண்பு பூண்டு, யானையின் மீதேறி வீடுசென்றார். எறிவாரும் மழுவை வீசி யெறிந்து விட்டு, அன்றிருந்து மூன்று ஆண்டுகள் வரை, அவ் விடத்திலேயே தங்கி, மனத்தினாலே, வழிபாடு செய்து வந்தார். பின்னர், யோகிகளாலும் அடைய முடியாத காட்சியோடொக்கும் தனிநிலையைச் சிவனருளால், அடைந்தார்.

# இணைப்பு 3.

# உபமன்னிய பக்த விலாசம்

## 29-வது அத்தியாயம்-வீரபக்தர் சரித்திரம்.

கௌபீனத்தால் பெருமை பெற்ற அமர்நீதி நாயனரை வணங்கி, ஸ்ரீ வீரபக்தநாதருடைய வரலாற்றை உங்களுக்குச் சொல்லுகிறேன். புலிக்கொடி பொறித்த பொன்மலை யுடையான் அநபாயன் என்னும் அரசன்; வாள்கொண்டு மலைகளை வெட்டிக் காவேரி ஒழுகிவர அரண்வழி செய்தான். இவனுடைய ஊர் கருவூர் என்னும் பெயருடையது; செல்வத்திற்கு இருப்பிடமா யது. அந்தத் தெருக்களில் உள்ள இரத்தினங்கள் விளக்கு வரிசைபோலப் பிரகாசித்தன. அங்கே, பக்தர்கள் தியானிப்பதும், தேவர்கள் புகழ்வதுமான திருவானிலை என்னும் சிவன் கோயில் பொன் மதில்களோடும் இருந்தது. அங்கே, சைவப் பார்ப்பனக் குடியிலே பிறந்த வீரபக்தர் என்பார், சிவம் விளங்கும் திருவுள்ள முடையாராய்ச் சிவனணையை வளர்த்து வந்தார். திருத்தொண் டிற்கு, இடையூறு நேர்ந்தபொழுதெல்லாம், மழுவைத் தாங்கிவந்து, சிங்கத்தைப் போல, அவர்களது துன்பத்தைப் போக்குவாராயி னர். திருவானிலையின் தனித்தொண்டர் சிவகாமர் என்னும் பெயர் உடையார்; மாலைசாத்தி வருவோர்; அன்பருக்கடியார் பூப்பறிப்பதில் ஈடுபட்டு வந்தார்.

விடியற் காலையில் குளித்துவிட்டு, வாயைக் கட்டிக் கொண்டு, பூந்தோட்டத்திற்குள் விரைந்துசென்று பூப்பறித்தபின், குறித்த காலத்தில், சிவனை வழிபட வந்துகொண்டிருந்தார். மகாநவமித் திருவிழாவின் முதல் நாளன்று, சோழ அரச ரின் வெற்றியானை, ஆற்றில் நீராடி, எங்கும் பரவி முழங்கும் பறை யொலியோடு, வந்துகொண்டிருந்தது. ஒழுகி வடியும் மதநீர்த் துளியால், அருவி வீழும் மலையைப்போலத் தோன்றும்பெரியதாம்

அந்த யானையானது, தன்னை யடக்க மாவெட்டிகள் படும்பாட்டைத் தூரத்தே எறிந்துவிட்டு, தெருக்களுக்குள்ளே நடமாடியது; தொலைவில், முன்னாக வந்துகொண்டிருந்த சிவகாமரின் தண்டிற் கட்டியுள்ள பூங்குடலையைப் பறித்துத் தரையில் சிதறியது. அச்சத்தால் கலங்கிய மாவெட்டிகளின் தலைவர்கள், பெரு முயற்சியோடு ஓட்டிக்கொண்டு சென்றனர். அதனைத் தடிகொண்டடிக்கக் கோபத்தோடும், பின் தொடர்ந்தார். அவ்வாறு போகுமதனைக் கிட்ட முடியாதவராய் இடறிவிழுந்து, கையால் தரையில் அறைந்துகொண்டு "சிவதா" என்றழுதார். "கதியற்றவர் தம் நிதியே! சிவதா! யானைத் தோலைப் போர்த்தோய் சிவதா! கருணைக்கடலே! சிவதா! அமுதம் அருள்வோய்! சிவதா! திங்களும் கங்கையும் வளைதரு முடிமேல் அணிதரும் மலர்த்திரளிதனை அந்தோ! யானை சிதறியதையோ! சிவதா! சிவதா! என் அழுகையைக் கேட்கும் தலைவன் உளனேல், அரி தேடிய அவனது திருவடி தொழுது, அன்பர்கள் சூழ்ந்திருக்க, அவர்களில் யான் யார்" என்று புலம்ப, அதனைக்கேட்டு வீரபக்தர், அங்குவந்து கோபத்தால் மிக விளங்கிச் சிவபக்தரின் பகைவர்களுக்கு அச்சத்தையூட்டும் தலைவராய்த் தோன்றினர். "அந்தச் சிவத் துரோகியைக் கொன்று காக்கின்றேன் இப்பொழுதே" என்று கூறி மரணத்தின் வாயேபோன்ற மழுவினை விருப்புடன் கொணர்ந்து, சிவகாமரை நோக்கி "இவ்வாறு உம்மை வருந்தச்செய்த யானை எங்கே" என்று கேட்டார்? "நல்லறிவுடையோய் கடவுளுக்குரிய பூக்களை பூமியிற் சிந்தி, இந்த வழியே சென்றது" என்றார். அது கேட்டு "எவ்வாறு பிழைக்கும் யானை" என்று கூறிக் கோபத்தால் பிரகாசித்து, ஒளிர்தரு மழுவைத் தாங்கிப் பின்தொடர்ந்துசென்று, அந்த யானையைக் கண்டார். "முன்னே கடவுள் உரித்த யானையைப்போன்றதோர் வேறொரு வடிவமோ ஈது! விண்ணவர் தடுப்பினும் இந்த யானையைத் துண்டு துண்டாக வெட்டுவேன்" என்று கூறிக்கொண்டே யானையின் பின்புறத்தே, காலால் தாக்கினர்.

கோபத்தால் கிளர்ந்த மாவெட்டிகளோடும் அந்த யானை திரும்பி யது. அந்தப் பிராமண தீரர், அச்சம நீங்கி, யானையின் எதிராகக் குதித்தெழுந்து, மழுவினாலே துதிக்கையைப் பிளந்து, முன்னே வீழ்த்தினார். துதிக்கை அறுந்து, அது, கீழே விழுந்தது.

கழுத்தின்மேலேறி யிருந்த இருவரையும், பக்கத்திலிருந்த மூவரையும், அவர் கொன்றார். ஓட்டிச்சென்ற ஐவரோடு, அரச யானை அழிந்தது. "இதனை அரசரிடம் கூறுங்கள்" என்று மற் றையோர், வாயிற் காவலரிடம் விரைந்துசென்று கூறினர். வாயிற் காவலாளர்கள், அதனைக்கேட்டு, அச்சத்தால் மனங்கலங்கியவர் களாய், உள் நுழைந்து, கூப்பியகையோடும், அரசரிடம் தெரிவித் தனர். அரசர் "பகைவர்களை யெல்லாம்வென்ற எனக்கு,இவ்விதம், இன்று நடந்ததென்னை? செய்யத்தகாததை எவர் செய்தனர்" என்றுகூறிக் கோபத்தால், சிங்கத்தைப்போல, வெளிவந்தார்.

அந்த அரசனால் கட்டளையிடப்பட்ட சேனை, சதுரங்க பலத் தோடும், பலவித ஆயுதங்களோடும் முழங்கும் பேரி, சங்க காகளங் கள், என்ற இவற்றின் ஓசையினாலும், குதிரைகளின் கனைத்தலினா லும், யானைகளின் பிளிறுதலினாலும், போர்வீரர்களின் சிங்கநாதத் தினாலும், தேர்ச்சக்கரங்களின் ஒலியினாலும், கடலொலியைக் கீழ டக்கி, அவனருகே வந்தது. அந்தச்சேனையானது, பின்தொடர்ந்து வரத் தான் தனியே, காற்றோடொத்த உயர்ந்த குதிரையின் மீதேறி, திகைத்திருந்த ஊர் மக்கள்இடைவிடாது நெருங்கியுள்ள தெருவை அடைந்தான். அந்த மாவெட்டிகள் ஐவரோடும், கால் களாலே மலையை ஒத்த மதயானை, இறந்துகிடப்பதனை, முன்னே கண்டான். அரசன், வேறொரு பகைவரையும் காணவில்லை; இருகையானைபோல் மழுவை எந்தியிருந்த அந்த அன்பரையே கண்டான் "இந்தப் பக்தர் கொன்றவர் அல்லர்போலும். எவராலே இந்த யானை கொலையுண்டது" என்று அரசன் கேட்க, சாவாது தப்பிய மற்றைய வேலையாட்கள், "உம்முடைய யானையின் எதிரே நிற்க, வீரரில் எவனுக்குத்தான் ஆற்றலுண்டு? கோபம் கொண்ட

இந்த அடியாரின் மழுவினுலேதான், இந்த யானை கொலையுண்டது." என்றனர். இதுகேட்டு, "வேணிப்பிரானின் பக்தர்கள் காரணமின்றிக் கொல்லார்" என்று எண்ணிச் சேனையை நிறுத்தி விட்டுக் குதிரையினின்று கீழே இறங்கினன். "மதம் பிடித்த இந்த யானையால் தொண்டருக்குக்கெடுதி நேரிட்டிருப்பின், யான் என் செய்வேன்! என்னுடைய தவத்தின் பயனுல் அவ்வாறு ஒன்றும் நிகழவில்லை" என்று மனங்கலங்கியவனுய், வீரபக்தரை நோக்கி "நடந்ததை நான் அறியேன். கேட்டதுஅங்கொன்று.அது கிடக்க. ஐந்துமாவெட்டிகளோடு இந்த யானை, என்ன தீங்கு செய்ததோ ?" என்முன். அந்தப் பக்தரும், அந்த அரசரை நோக்கிச் "சிவகாமர், சிவனுக்கேற்ற பூக்களை பறித்துக்கொண்டுவந்தார். அவற்றைப்பறித்து இந்த யானை சிந்தியது. அரசனே! ஆதலின், நான், அதனைக் கொன்று வீழ்த்தினேன். மாவெட்டிகள், சக்தியற்றவராய், இவ்வாறு,தவறிழைத்துக்கொலையுண்டார்கள்."என்று கூறப்பெற்ற அரசன், அஞ்சினவனுய், அவரை வணங்கி, "இவ்வாறு பாவம் புரிந்தவனுக்காகத் துதிக்கையை வெட்டுவது மட்டும் போதாது. புண்ணியமான மழுவால் என்னை வெட்டுவதும் தக்கதன்று. என்னுடைய வாளைக் கொண்டே அபராதியான என்னைக் கொல்லும்" என்று கூறி, உறையினின்றும் வாளை, தானே எடுத்து. அவ்வரசன், அவரிடம் கொடுத்தான். "பக்தர்களில், இவருடைய பக்தி எல்லை அற்றது" என்றுகருதித் தம்மைத் தாமே கொல்ல, விரைந்து வாளை வாங்கிக் கொண்டார். வாளை வாங்கிக்கொண்ட அவருடைய முன்னே நின்று, அவரது திருவடியில் வணங்கி, "அபராதியான என்னை இந்த வாளினுல், கொன்று, என்னை, மன்னியுங்கள். என்னுல் செய்யத் தக்கது உம்மால் செய்யப்பட்டது" என்று பூபதி கூறப் பக்தரும், "இது வியத்தகு செய்கை" என்று உள்ளம் நடுங்கினர். "மாவெட்டிகளோடு யானை கொலையுண்டு கிடக்கவும், பெருந் தவறு புரிந்துள்ளமையால், என்னையும் கொல்லும்' என்று கூறும்

இவ் அரசர், இந்த வாளினல், எவ்வாறு கொல்லத் தக்கார்? என் னுயிரைக்கொல்வதே தக்கது" என்று வாளைக் கழுத்திலே பூட்டி னர். "அந்தோ! கெட்டேன் " என்று அரசர் பெருமான் கூறி, வாளொடு விளங்கும் கையுடையாரை நோக்கி, "உலகம் போற்றும் நீர் இவ்வாறு, செய்வது தக்கதல்ல" என்று, அரசன், அவரது கையைத் தடுத்தபோதிலும், பக்தர், தம் தறுகணண்மையில் ஈடு பட்டே நின்றூர்.

அப்போது, சிவபெருமானது ஆணையால், வானத்தில் அசரீரி வாக்கு எழுந்தது."அன்பர்களை உலகத்திற்குத் தெரிவிக்க வேண்டி, யானையானது, பூக்களைச் சிந்தியது. திங்கட் பிறை அணிந்த திருமுடியாரின் திருவருளால், இச்செயல்கள் அனைத் தும், நிகழ்ந்தன" என்று கூறியபொழுது, யானையானது மாவெட் டிகளோடும் எழுந்தது. வாளை வீசியெறிந்து, பக்தர் அரசரை வணங்கினர்; அரசரும் பக்தரை வணங்கினர். தேவர்கள் அந்த இரு பக்தர்மீதும் பூமாரி பெய்தனர்; கடவுள்வாக்கைப் பக்தரும் சோழ அரசரும் புகழ்ந்துகொண்டிருக்க, சிவகாமரும் தம் பூங்குடலை நிறையப்பெற்று, மகிழ்ச்சி யடைந்தார். பின் தூங்கி எழுந்ததுபோல, மதம் ஒழுகும் சுவட்டோடே, பேர் ஆரவாரத் தோடும், வெற்றி யானையை முன்னே கொண்டுவந்து நிறுத்தி, அரசனைக்கண்டு, மாவெட்டிகள் "பட்டவர்த்தனம் என்னும் யானை யின் அரசின்மேல், அரசர்க்கரசே! நீர் ஏறி அருள்க" என்றனர். வீரபக்தரும், விருப்போடும்இவ்வாறு கூற, அரசர் அதன்மீதேறிக் கொண்டார். கடலிற்கு ஒப்பாக ஒலிக்கும் படைவீரரின் நடுவே, வந்தி மாகதர் முதலோர் போற்றிவர, அந்தச் சோழர், நடராஜப் பெருமானின் திருவடி பொறித்த திருமுடியோடும், தம் வீட்டி னுள், இனிதே புகுந்தார். மிகவும் ஆழ்ந்த பக்தர் செய்த ஆண்மை யும், தன்னைத்தானே கொல்ல வேண்டிவந்த சிவ பக்தனும் அரச ருடைய பெருமையையும், திருத்தொண்டின் உண்மைப்பொருள் களாம் இவை இரண்டையும் - தம்மடியார் வேண்டுவதே நாள்

தோறும் தந்தருளும் சிவனே அன்றி, வேறுயார் புகழ்வார்? சிவகாமர், அந்த வீரபக்தரை நோக்கி, "சிவபக்தியின் பெருமை அறிவதற்கு அரியது" என்றுகூறி, அரசரைப் புகழ்ந்து, உயிர்கட்குத் தலைவனுர் திருத்தொண்டில் ஈடுபட்டார். இவ்வாறு சிவகாமர் வீரபக்தர் என்ற இருவரும், சிவபக்தர்களின் துன்பத்தைப் போக்கிப் பலநாள் உதவிப் பின் வெள்ளிமலையின் எல்லையிலே இறைவன் உலகில் கணநாதர்களில் தலைவராயினர். திருத்தொண்டர்களின் இடையூற்றை நீக்கும் வீரபக்தரின் கதையை, வாயால் ஓதுவாரும், உள்ளத்தால் நினைப்பாரும், பிறையணிந்தான் உலகம் பெறுவர்.

---

The B. N. Press, Educational Printers, Madras.